குடும்பத்துடன் களிக்க...

# கல்கி

KALKI 25.9.2005
ரூ.7.00
96 பக்கங்கள்



## சின்னத்திரை; பெரிய்ய பிரச்னைகள்!




கல்கி

25.09.2005

# வட்டமேஜை

சக்சஸ் ஸ்டோரி சிம்ப்ளி சூப்பர்ப். ஆச்சி மசாலா போலவே காரசாரமான பேட்டி!

- கே. சுந்தரேசன்,
சென்னை-83.

ப. சிதம்பரம் பற்றிய கேள்விகள் பத்தும் நெத்தியடி. கார்த்திக்குக்குச் சோறு ஊட்டுவது பற்றிப் படித்து சிரிப்பை அடக்க முடியவில்லை.

- ஸ்ரீவித்யா காளிதாஸ்,
சிதம்பரம் - 2.

“நான் அடிமையில்லை!”

## பூமலர்ந்த அட்டைகளிலே..

விஜயகாந்தின் அதிரடி பேட்டியைப் படித்தபோது, உண்மையிலேயே பக்குவப்பட்ட ஓர் அரசியல்வாதியாகத்தான் தோன்றினார். தகுந்த நேரத்தில் தட்டிக் கொடுத்தக் கல்கிக்கு பாராட்டு!

- எஸ்.ஆர். ஹரிஹரன்,
சென்னை.

‘வாழ்க்கை ரயில் பயணம் போல்; பயணம் முடியும்போதுதான் தெளிவு ஏற்படுகிறது’ என்ற தத்துவத்தை அழகாகப் புரிய வைத்திருக்கிறார் கதாசிரியர் சந்திரா.

- ஜே. துரைராஜ், சென்னை.



கல்கி 64ஆம் ஆண்டில் அடி எடுத்து வைக்கிறது. வியப்பும் மகிழ்வும் அடைகிறேன். 36 ஆண்டுகளுக்கு முன் நான் எட்டாம் வகுப்பு படித்துக் கொண்டிருந்தேன். கல்கியில் 'பொன்னியின் செல்வன்' தொடரின் அறிவிப்பு வெளியாகியிருக்க, பள்ளிக்கூடத்தின் புளியமரத்தின் அடியில் நின்று அது பற்றி ஆசிரியர்கள் பேசிக் கொண்டிருந்தார்கள்.

எனக்கு பள்ளிப் பாடங்களிடையே அதே நினைவு. அடுத்த வாரத்தில் 'கல்கி'யைப் படித்துவிட்டேன். மறுநாள் மாலை வகுப்பு முடிந்ததும் கணக்கு ஆசிரியர் "கல்கி தொடர் படிச்சீங்களா?" என்று கேட்டார். முன் வரிசையிலிருந்த சந்தானலட்சுமி, பூமா போன்றவர்கள் "இல்லை" என்று தலையாட்டினார்கள். "சரி, இப்போது,



'**மோ**டியை விமர்சிப்பது ஃபேஷனாகிவிட்டது' என்று விசனப்படும் இல. கணேசன், விமர்சனம் செய்யுமளவுக்கு அவர் நடந்துகொண்டது பற்றி வருத்தம் தெரிவிக்காதது ஏன்?

- என். பாலகிருஷ்ணன், மதுரை.

**யா**மறிந்த அட்டைகளிலே 'காதல்' சந்தியாவை இவ்வளவு அழகாகப் படம் பிடித்துப் போட்டது நீங்களாகத்தான் இருக்கும்!

- ஜே. விஜயலட்சுமி, ஆதம்பாக்கம்.

'**நா**ம் கடவுளை நேசிப்பவர்களாக இருப்பதைவிட கடவுளால் நேசிக்கப்படுபவராக இருக்க வேண்டும்' - எவ்வளவு உண்மையான, அர்த்தமுள்ள வார்த்தைகள்!

- ஆர். ரங்கநாதன், சென்னை - 17.

**கா**ர்த்திக்கின் 'சரணாலயம்' பற்றிய கேள்விக்குத் தராசாரின் பதில் சிரிக்கவும், சிந்திக்கவும் வைத்துவிட்டது.

- டி. முருகேசன், திருவாரூர்.

# "படிச்சுட்டியா புள்ள?"

நுழைந்துள்ள கதாநாயகனின் முழுப் பெயர் என்ன?" என்று கேட்டார். "பொன்னியின் செல்வன்" என்றாள் சாந்தா. "இல்லை" என்று கூறி அதே கேள்வியை பூமாவிடம் கேட்டார். அவளுக்கும் தெரியவில்லை. "பாடப் புத்தகத்தை மட்டும் படிச்சா போதாது, நானே சொல்றேன்" என்று ஆசிரியர் விடை சொல்வதற்கு முன், நான் "வல்லவராயன் வந்தியத்தேவன்" என்று மெல்லக் கூறினேன். ஆச்சர்யமாகப் பார்த்த அவர் "படிச்சுட்டியா புள்ள?" என்றார். அப்பப்பா... அப்போது எனக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியை, பெருமையை எழுத்தில் வடிக்க இயலுமா?

- மணிமேகலை குப்புசாமி, புதுச்சேரி




**கல்கி**

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் : கி. ராஜேந்திரன்

கல்கி பில்டிங்க்ஸ், 47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் : **சீதா ரவி**

ஆசிரியர் குழு : **அனுராதா சேகர்**, **ஆர்.சி. ஜெயந்தன்**

வடிவமைப்பு : **எஸ். ஸ்டீஃபன்**, **பி.ஆர். ராஜன்**

தொலைபேசி : 2225 1522, 2225 0623, 2225 1324

தொலைநகல் : 044 - 22251021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு : kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு : subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு : info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.390/-
ஆறு மாதம் : ரூ.195/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 63.50 யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2060/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேஜைக்கு

**ரொம்பவே மிரண்டு போயிருந்தார் லைலா. 'உள்ளம் கேட்குமே' படத்தில் இன்னோசன்ட் 'ப்ரியா'வாக பிரமாதப்படுத்தியவருக்கு, இத்தனை நாள் பாராட்டு மழை. இப்போது பய மழையில் நனைந்தபடி நடுங்கிக் கொண்டிருந்தவர், பிரசாத் ஸ்டூடியோவில் கிடைத்தார்.**

'கண்ட நாள் முதல்' படத்தின் கடைசி நாள் படப்பிடிப்பு. அது ஒரு பாடல் காட்சி. பாடல் காட்சியில் நடிக்கும்போது நட்சத்திரங்கள் சந்தோஷத்தில் மிதந்து கொண்டிருப்பார்கள். விதவிதமான காஸ்ட்யூம்கள், குளுகுளு படப்பிடிப்புத்தளம், ஐந்து நிமிடத்துக்கொரு பழச்சாறு என திருவிழா போல அல்லோல கல்லோலப்படும் பாடல்காட்சி படப்பிடிப்பு. ஆனால் அந்த வினோத செட்டுக்குள் எங்கும்

# லைலா, டிராகுலா,

கும்மிருட்டு. கறுப்பு நிற உடைகளில் உள்ளே பல உருவங்கள் உலவிக் கொண்டிருக்க, "லைட்ஸ் ஆன்" என்று குரல் கொடுத்தார் இயக்குனர் ப்ரியா. அடுத்த நொடி ஒரு கண்ணாடி ஜன்னலில் மட்டும் பளீரென்று விளக்கு ஒளிர... "ஆக்ஷன்" என்று



மீண்டும் உத்தரவு பிறக்கிறது. அடுத்த நொடி அந்த ஜன்னலில் தோன்றிய உருவத்தைப் பார்த்து லைலா அலற... பக்கென்று நமக்கும் வயிறு கலங்கி விட்டது. அச்சு அசலாக அப்படியே ஒரு வெஸ்டர்ன் டிராகுலா!

"லைலா மாதிரி பயப்படாதீங்க, அந்த கெட்-அப்லே இருக்கிறவர் நம்ம பிரசன்னா" என்றார் ப்ரியா. மணிரத்னத்தின் உதவியாளர். அவர் சொல்வதை நம்புவதா வேண்டாமா என்ற தயக்கம். அந்த நேரம் பார்த்து ஷாட் ரிகர்ஸல் முடிந்து டிராகுலா நெருங்கி

# ...லைல்லா!

வர... "ஹலோ நான் பிரசன்னா தாங்க" என்று டிராகுலா பிராண்டெட் கோரைப் பற்களோடு சிரித்தவரைக் கண்டு நிம்மதிப் பெருமூச்சு.

"தமிழ் சினிமால இதுக்கு முன்னாடி எந்த ஹீரோவும் ப்ராப்பர் டிராகுலா கெட்-அப் போடலே. நான் தான் ஃபர்ஸ்ட். லைலாவுக்கு மட்டும் இந்த விஷயம் சர்ப்பிரைஸாக இருக்கட்டும். அப்போதான் அவங்க அதிர்ச்சியை இயல்பா பதிவு செய்ய முடியும்னு சொல்லிட்டாங்க... அதனாலே முதல் ஷாட் அவங்க ரியாக்ஷன்தான் எடுத்தோம். அப்போ கத்த ஆரம்பிச்சவங்கதான், இன்னும் நிறுத்தல!" என்று டிராகுலா கெட்-அப்பில் ரொமான்டிக்காகச் சிரித்தார்.

அப்படியே லைலா பக்கம் திரும்பினால், அந்த அழகு முகத்தில் மிரட்சியின் ஆட்சி அப்படியே இருந்தது. "கடைசி நாள் படப்பிடிப்பிலே இதை நான் எதிர்பார்க்கவே இல்லீங்க. ப்ரியா ஒவ்வொரு பாட்டையும் ஒரு தினுசா டிசைன் பண்ணியிருக்காங்க. எல்லாமே மனசுக்குள்ளே ஜலதரங்கம் வாசிக்கிற மாதிரி ரொம்ப ஈரமான பாடல்கள். இந்த ஷாட்ஸ் எந்தப் பாட்டுல சேர்க்கப் போறாங்கன்னு எனக்கே சர்ப்ரைஸா இருக்கு. உள்ளம் கேட்குமேவுக்கு பிறகு ஒரு சூப்பர் படத்துலே நடிச்சிருக்கோம்ன்ற திருப்தி இருக்கு. அந்த ப்ரியா மாதிரி இந்த 'ரம்யா'வும் தமிழ் ரசிகர்கள் ஹார்ட்டை டச் பண்ணுவா பாருங்க" என்றவரிடம், 'கல்யாணம் எப்போ?' என்று கேட்கப் போய், "இதெல்லாம் கேட்டா நான் அப்புறம் டிராகுலாவா மாற வேண்டி இருக்கும்" என்று முறைத்தார்.

- ஸ்ரீ








# வாடாமலர்கள்!

பல வருடங்களாக திருவையாறு தியாகராஜ உத்சவ நிகழ்ச்சியை நேரடி ஒளிபரப்பாக வழங்கி வரும் தூர்தர்ஷன், இப்போது அந்த ஒளிபரப்புகளின் தொகுப்பை விஸிடி / டிவிடி வடிவில் வெளியிட்டிருக்கிறது.

தியாகராஜரின் 'நௌகா சரிதம்' என்ற இசை நாடகத்தை நாட்டியக் கலைஞர் ராதா மேடை நிகழ்ச்சியாக தூர்தர்ஷனுக்குத் தயாரித்து வழங்க, அதன் ஒளிப்பதிவும் வி.ஸி.டி / டி.வி.டி வடிவம் பெற்றுள்ளது.

சென்னையில் விழா நடத்தி இவ்விரண்டு பதிவுகளையும் வெளியிட்டது தூர்தர்ஷன்.

"நானும், கமலா அக்காவும் எங்களோட மாணவிகளுடன் சேர்ந்து நௌகா சரித்ரத்தை, நாட்டிய நாடகமாக பலமுறை மேடையேற்றியிருக்கிறோம். 1990ல், இதை தூர்தர்ஷனில் ஒளிபரப்பினார்கள். நல்ல வரவேற்பு கிடைக்கவே, மீண்டும் மீண்டும் ஒளிபரப்பப்பட்டது. டில்லி தூர்தர்ஷனின் முதன்மை நிர்வாக அதிகாரி கே.எஸ்.ஷர்மா, கமலினிதத், சீதா ரத்னாகர் போன்றவர்களின் சீரிய முயற்சியால் இன்று டிவிடி வடிவம் பெற்றுள்ளது. மேடையில் ஆடும்போது சவுண்டு எஃபெக்ட்ஸ் மட்டும் இருக்கும். இப்போது செட் போட்டு, இடி, மின்னல், மழை என ட்ரிக் ஷாட்ஸ் வைத்து, லைவ்வா படகில் பயணிப்பதுபோல எல்லாம் அமைத்ததால் ரீ கொரியோகிராஃப் செய்திருக்கிறோம். கம்ப்யூட்டர் தொழில் நுட்ப வசதியால் தியாகையரின் அற்புதமான ஓபேரா காலத்தால் அழிக்க முடியாதபடி பதிவு செய்யப்பட்டுவிட்டது" என்றார் ராதா மன நிறைவுடன்.

இசையுலகில் மலர்ந்துள்ள மற்றொரு அரிய வாடாமலர் 'ஸர்வ லகு' என்ற டி.வி.டி.

ம்ருதங்கம் என்ற வாத்தியம் குறித்தும் அதனை வாசிப்பதும் கச்சேரியைப் போஷிப்பதும் எப்படி என்பது குறித்தும் அனைத்து விஷயங்களையும் சங்கீதகலாநிதி வேலூர் ராமபத்திரனைக் கொண்டு பதிவு செய்வித்து வெளியிடப்பட்டுள்ளது. ராமபத்திரனும் சரி இதில் பங்கேற்கும் இதர கலைஞர்களும் சரி பொருளாதார நோக்கு இன்றி இப்பணியில் ஒத்துழைத்திருக்கிறார்கள்.

காரணம், இந்தப் பதிவின் விற்பனை மூலம் கிடைக்கும் தொகை அனாதை இல்லங்களுக்கு ஒதுக்கப்படவிருக்கிறது.

இந்த நல்ல பணியைத் தமக்குச் சொந்தமான ஒலிப்பதிவு அரங்கின் துணைகொண்டு செய்து முடித்து வெளியிட்டிருப்பவர்: இசை ரசிகரான D.V. சுப்ரமண்யம். தமது மகள் மரகதலக்ஷ்மிக்கு நினைவாஞ்சலியாக இதனைச் செய்துள்ளனர் சுப்ரமண்யம் தம்பதி.

- அலமு



# மீண்டும் ஓர் இலக்கிய சூறாவளி

தமிழ் இலக்கிய உலகில் மாபெரும் புரட்சி செய்து சாதனைப் படைத்த

# வி.ஸ.காண்டேகர் கதைகள்

பணம் - பணக்காரன், ஏழையின் எண்ணத்தில்.
பெண் - இளைஞன், முதியவரின் பார்வையில்.
கடவுள் - ஞானி, நாஸ்திகனின் சிந்தனையில்.
என்றபடி ஆராய்வது காண்டேகரின் மகாத்மியம்.




எழுதுகோலால் உலகை வாழ வைக்கும் உத்தமர்களில் காண்டேகர் ஒருவர்!

டாக்டர். **மு.வரதராசன்**

புத்தகத்துக்கு விளம்பரம் எதற்கு? காண்டேகரின் நூல்களுக்கு முன்னுரை எதற்கு?

**பேரறிஞர் அண்ணா**

நான் படித்த மிகச் சிறந்த புத்தகங்களில் காண்டேகரின் நாவல்களைச் சொல்வேன்.

**எம்.ஜி.ஆர்.**

1000 ஆண்டுகளுக்கு ஒரு முறை அவதரிக்கக் கூடிய அபூர்வ எழுத்தாளர் காண்டேகர்

**கவிஞர் வாலி**

மொழியின் எல்லைகளைக் கடந்தவர் எழுத்தாளர் காண்டேகர். காலத்தின் எல்லை களைக் கடந்தது அல்லையன்ஸ் நிறுவனம். மொழியின் எல்லை களைக் கடந்தவரை, காலத்தின் எல்லைகளைக் கடந்தவர்கள் பதிப்பிக்கிறார்கள். வாசகன் வாழ்த்துகிறான்.

**கவிப்பேரரசு வைரமுத்து**

ஒரு பத்து ஆண்டுகளில் காண்டேகர் நூல்களைப் போன்ற புத்தகங்களை நான் படித்ததில்லை. படித்து அசந்துபோய்விட்டேன்.

**நடிகர் சிவகுமார்**

வாழ்க்கையின் பல்வேறு கட்டங் களை பிரதிபலித்துக் காட்டுகிறது காண்டேகரின் கதைகள்.

**இலங்கை வானொலி**

மூலத்துக்கும், மொழிபெயர்ப்புக் கும் வேற்றுமை தெரியாதவாறு, கா.ஸ்ரீ.ஸ்ரீ. தனது எளிய இனிய தமிழ் நடையால் வாசகர்களைக் கவர்ந்துவிட்டார்.

**சுதேசமித்திரன்**

படிக்க அலுக்காது சிந்தனையைத் தூண்டிவிடும். சிறந்த சொல்லோவியங்களால் சித்தரிக்கப்படுவது காண்டேகருடைய நூல்கள்.

**தினமணி**

எந்தத் தமிழ் எழுத்தாளர் நவீனத்தையும் விட, அதிகப் புகழோடு வரவேற்கப்பட்டது காண்டேகருடைய நாவல்கள்.

**[illegible] சோமநாதன்**

| | | |
|---|---|---|
| 1. | யயாதி (I & II) | 130.00 |
| 2. | எரி நட்சத்திரம் | 66.00 |
| 3. | கண்ணீர் | 80.00 |
| 4. | இரு துருவங்கள் | 95.00 |
| 5. | மனோரஞ்சிதம் | 60.00 |
| 6. | காண்டேகர் கதைகள் - 1 | 50.00 |
| 7. | காண்டேகர் கதைகள் - 2 | 50.00 |
| 8. | காண்டேகர் கதைகள் - 3 | 50.00 |
| 9. | காண்டேகர் கதைகள் - 4 | 50.00 |
| 10. | கிரௌஞ்சவதம் | 100.00 |
| 11. | இரு மனம் | 80.00 |
| 12. | கூட்டுக்கு வெளியே | 25.00 |
| 13. | அரும்பு | 25.00 |
| 14. | வெறும் கோயில் | 45.00 |
| 15. | வெண்முகில் | 70.00 |
| 16. | சுகம் எங்கே? | 55.00 |
| 17. | கருகிய மொட்டு | 70.00 |
| 18. | வாயு கன்னிகை | 30.00 |
| 19. | ஆஸ்திகன் | 40.00 |
| 20. | அமுதக் கொடி | 70.00 |
| 21. | புயலும் படகும் | 50.00 |

கலைமகள் மாத இதழில் காண்டேகரின் நாவல்கள், கா.ஸ்ரீ.ஸ்ரீ.-யின் மொழி பெயர்ப்பில் வந்தபோது ஆர்வத்துடன் படித்திருக்கிறேன்.

எழுத்தாளர் **சுஜாதா**




என்னுடைய படிப்புப் பழக்கத்தில் முதல் முதலில் நான் படிக்கத் தொடங்கிய புத்தகம் - அல்லையன்ஸ் நிறுவனத்தின் காண்டேகர் புத்தகங்கள் தான்.

**திலகவதி** ஐ.பி.எஸ்.



அல்லயன்ஸ்

(நூற்றாண்டு கண்ட முதல் தமிழ்ப் புத்தக நிறுவனம்)
244, ராமகிருஷ்ண மடம் சாலை,
மயிலாப்பூர், சென்னை - 600 004.
தொலைபேசி : 2494 1314
email : srinivasan@alliancebook.com www.alliancebook.com

# சின்னத்திரையில்

## வெடிக்கும் விவகாரம்...துடிக்கும் நடிகைகள்!

கடந்த ஆகஸ்ட் பதினைந்தாம் நாள். சுதந்திர தினத்தை தேசமே கொண்டாடிக் கொண்டிருந்தது. ஆனால் அதே தினத்தன்று சென்னை, தென்னிந்திய நடிகர் சங்கக் கட்டடத்தில் கூட்டம் கூட்டமாய்க் கூடினார்கள் சின்னத் திரை நடிகர், நடிகைகள். அங்கே நடந்த நிகழ்ச்சியில், தற்கொலை எண்ணத்திலிருந்து விடுதலை பெற சிறப்புப் பயிற்சி அளித்தனர் மனநல ஆலோசகர்கள். தடுமாற்றங்களையும், ஏமாற்றங்களையும் சந்திக்க முடியாமல் திண்டாடிப் போகும் சிலர், சினிமா துறையில் தற்கொலை செய்துகொள்வது தொடரும் சோகம். இப்போது அதுவே ஒரு தொற்று நோய் போல சின்னத் திரையையும் பற்றிக் கொண்டு விட்டதை ஷாலினி, சாருகேஷ் தற்கொலைகள் உறுதிப்படுத்தியுள்ள நிலையில், இது தொடரக் கூடாது என்று உஷாராகியிருக்கிறார்கள் சின்னத்திரையினர்.

பயிற்சிக்கு வந்திருந்த முன்னணி நடிகர், நடிகைகள் பலரிடமும் பேச்சுக் கொடுத்தோம். பலர் மனம் விட்டுப் பேசினாலும், சிலர் 'பெயரையோ, போட்டோவையோ போட்டு எழுதாதீர்கள். எங்கள் பிழைப்பில் மண் விழுந்துவிடும்' என்கிற முன்னெச்சரிக்கையோடு மனதைத் திறந்து கொட்டினார்கள். கடலில் மூழ்கி தற்கொலை செய்து கொண்டதாகக் கூறப்படும் நடிகர் சாருகேஷின் மனைவி.

"என்னையும் கடன்காரர்கள் கொடுமைப்படுத்துகிறார்கள். என் குழந்தைக்காக நான் வாழ வேண்டியிருக்கிறது" என்று கண் கலங்கச் சொன்னார்.

"டி.வி உலகம் பற்றி பெரிய பெரிய கற்பனைகளோடு உள்ளே நுழையப் போராடுகிறோம். நுழைந்து விட்டால் இங்கே தாக்குப் பிடிப்பது எத்தனை கஷ்டமானது என்பது எங்களுக்கு மட்டும் தான் தெரியும். வெளியே இருந்து பார்ப்பவர்களுக்கு எதுவும் தெரியாது" என்கிறார் நடிகர் சஞ்சீவ்.

ஷாலினி, வயிற்று வலியால் துன்புற்று தற்கொலை செய்து கொண்டார் என போலீஸ் ஆவணங்கள் சொல்கின்றன. ஆனால் உண்மையான காரணம், அவர் சந்தித்த நெருக்கடி, ஷாலினியோடு புதைந்து போய்விட்டது. அவரைப் போல மனசுக்குள்ளேயே பூட்டி வைத்துக் கொண்டு, மன அழுத்தத்தோடு பலரும் மருகிக் கொண்டிருந்தோம். சரியான தருணத்தில் இந்தப் பயிற்சி முகாமுக்கு ஏற்பாடு செய்த எங்கள் சங்க நிர்வாகத்துக்கு நன்றி சொல்ல வேண்டும்" என்று சொன்னவர் அக்காவும், தங்கையும் எதிரும் புதிருமாய் நடித்த ஒரு தொடரில்

# என்ன பிரச்னை?



• வசந்த்

அக்கா பாத்திரம் ஏற்ற கனிவான நடிகை. இதை உறுதிப்படுத்துவது போல மனம் திறந்து பேசினார் ப்ரியா மகாலட்சுமி. "எனக்கு அம்மாதான் எல்லாமே. அவர் திடீரென்று இறந்து போனதும், ரொம்பவே தடுமாறிப் போனேன். இப்போது தெளிவு கிடைத்துவிட்டது என்கிறார்.

நடிகர், நடிகைகளுக்கு வரும் தற்கொலை எண்ணத்துக்கும், மன அழுத்தத்துக்கும் என்னதான் காரணம்? நாடு முழுவதும் ஒலித்த ஒரு புகழ்பெற்ற மெகா தொடரில், முக்கிய பாத்திரம் ஏற்ற நடிகர் கொட்டித் தீர்த்துவிட்டார்:

"சினிமா உலகத்திலே பெண்களுக்கு எந்த அளவு டார்ச்சர்கள் இருக்கோ... அதே அளவு டீவி இன்டஸ்ட்ரியிலேயும் இருக்கு. அதிலேயும் கல்யாணமாகாத பெண்கள்னா... சொல்லவே வேண்டாம். எனக்குத் தெரிஞ்ச ஒரு பிரபல சீரியல்ல அதில் மூன்று கதாநாயகிகள். அவர்களில் ஒருத்தர், 'அனுசரணையா' நடந்துக்கலேங்கிறதுக்காக, டீவி பிரமோ விளம்பரங்கள்ல மருந்துக்குக் கூட அவங்க தலையைக் காட்டல. இதை அந்தப் பெண்ணே எங்கிட்ட சொல்லி அழுதிருக்கா. இதைவிடக் கொடுமை, அவசரப்பட்டு காதலிச்சு, அவசரமா பிரிஞ்சு போயிடுறது. சினிமா உலகத்தைவிட இங்கேதான் காதல் திருமணங்கள் அதிகம். திருமணத்துக்குப் பிறகு இரண்டு பேருல யாராவது ஒருத்தருக்கு வாய்ப்புகள் குறைஞ்சு, வருமானமும் குறைஞ்சு போயிடுது. இந்த இடத்துலதான் பிரச்னையே வருது.

இன்னொரு பக்கம், இந்தப் பாழாப் போன டி.ஆர்.பி ரேட்டிங், ஸ்பான்சர்காரங்களோட டார்ச்சரால பல பேருக்கு கால்ஷீட் வீணாகி கடன்ல விழுந்துடுறாங்க. ஒரு மெகா தொடர் திரைக்கதையில ஒரு மெயின் டிராக்கும் பல சப்-டிராக்குகளும் இருக்கும். இதுல எந்த டிராக் மக்கள்கிட்டே அமோக வரவேற்பைப் பெறுதோ... அதைப் பல மாசத்துக்கு இழு இழுன்னு இழுத்துட்டு, சப்-ட்ராக் கதைக்காக ஒப்பந்தம் பண்ணின நடிகர், நடிகைகளை எல்லாம் வெயிட் பண்ணுங்கன்னு அப்படியே ஓரம் கட்டி வெச்சுடுவாங்க. தொடர்ல இவ்வளவு சம்பளம் வரும்னு கணக்குப் போட்டு, அதை முன்னாடியே கடனா வாங்கி குடும்பத்துக்குச் செலவு பண்ணிட்டு, திடீர்னு வருமானம் வரலேன்னதும் திகைச்சுப் போயிடுறாங்க."

"கட்டம் கட்டுறது கேள்விப்பட்டிருப்பீங்க... பிரேம் மாட்டுறது கேள்விப் பட்டிருக்கீங்களா?" என்று ஓர் அதிர்ச்சியான நிதர்சனத்தைப் போட்டு டைத்தார்.

"இன்னைக்குத் தயாரிப்பாளரையும், டைரக்டரையும் தாஜா பண்ணிக்கிட்டு, அவங்க எத்தனை மணி நேரம் வேலை வாங்கினாலும் இருந்து நடிச்சுக் கொடுத்துட்டு, எவ்வளவு சம்பளம் கொடுத்தாலும், அதை எவ்வளவு இழுத்தடிச்சுக் கொடுத்தாலும் வாயை மூடி வாங்கிட்டுப் போனாத்தான் எல்லாருக்கும் இங்கே வாய்ப்பு. ஏதாவது கொஞ்சம் பிரச்னையான ஆர்ட்டிஸ்ட்டுன்னு உங்களை நீங்க காட்டிக்கிட்டா முடிஞ்சுது. தொடர்ல உங்க கேரக்டர் எவ்வளவு ஃபுல் ஸ்விங்ல போனாலும் கவலைப்படாம நீங்க சாலை விபத்துலயோ, இல்லை நோய் தாக்கியே செத்துட்டதா கதையை முடிச்சு,



• ராஜேந்திரன்

உங்க படத்தை சுவத்துல மாட்டி மாலை போட்டு, ஒரே ஒரு ஷாட்டோட உங்களுக்கு குட்பை சொல்லிடுவாங்க... அப்படி இல்லேன்னா இன்னார் பாத்திரத்தில் நாளை முதல் இவர் நடிப்பார்னு முதல் நாள் எபிசோட்லயே அறிவிச்சு... முகத்துல கரியப் பூசுவாங்க.. இப்படி இங்கே நாங்க அனுபவிக்கிற கொடுமைகளைப் பத்தி சொல்லிக்கிட்டே போகலாம். இப்போ எங்களுக்குன்னு ஒரு சங்கம் வந்துட்டதால இதையெல்லாம் துணிச்சலா தட்டிக் கேட்க ஆரம்பிச்சுருக்காங்க'' என்று பாதியில் முடித்துக் கொண்டார்.

தொடர்ந்தவர் பிரபல ஒன்பது மணித் தொடரில் பெண் வழக்கறிஞராக பட்டையைக் கிளப்பும் ஒரு நடிகை. "நான் இந்தத் துறைக்கு வந்துதான் இவ்ளோ பிரபலமானேன். என்னோட கணவரையும் இதே இன்டஸ்ட்ரியிலிருந்து காதலிச்சுத்தான் திருமணம் செஞ்சுக்கிட்டேன். பொதுவா காதல் விவகாரத்துல தெரிஞ்சோ, தெரியாமலோ இறங்குற பல சகோதரிகள், ஒரு தெளிவு இல்லாமல், எதிர்காலத்தைப் பத்தி யோசிக்காமல் சட்டுனு ஒரு முடிவுக்கு வந்துடுறாங்க... இதுதான் பிரச்னைக்கு எல்லாம் மூலகாரணம். விவகாரம் வீட்டுக்குத் தெரிஞ்சதும் பெண்கள்கிட்டே இருக்கிற உறுதி ஆண்கள்கிட்டே இருக்கறதில்ல... அதனால திடீர்னு பின்வாங்கிடுறாங்க... இதனால சம்பந்தப்பட்ட பெண்ணுக்குத்தான் 'இவ அவனோட சுத்தினா, இவனோட சுத்தினா'ன்னு கெட்டப்பேர் வந்துடுதே தவிர, ஆண்கள் ஈசியா தப்பிச்சுடுறாங்க... இதைவிட பலபேர் சந்திக்கிற சம்பளப் பிரச்னை பற்றிச் சொல்லியே ஆகணும்'' என்றபோது அவரது முகத்தில் கடுகடு கோபம்.



• தற்கொலை தடுப்பு பயிற்சி முகாமில் தியான வகுப்பு...

"எனக்குப் பெயர் வாங்கிக் கொடுத்த தொடர் அது. அந்தத் தொடரை ரொம்பப் பிரபலமான ஓர் இயக்குனரின் தயாரிப்பு நிறுவனம்தான் தயாரிச்சது. ஆரம்பத்துல முப்பது எபிசோட் வரைக்கும் எனக்குச் சம்பளமே வரல... சரி மொத்தமாகக் கொடுப்பாங்கன்னு காத்திருந்தேன். அதுக்கப்புறமும் கிடைக்கல! நொந்து போய், ஆபீசுக்கே போய்க் கேட்டேன். 'நீங்க யார் கம்பெனியில வந்து பணம் கேட்குறீங்க தெரியுமான்?'னு கேட்டு வாயடைச்சு அனுப்பிட்டாங்க. பெரிய இயக்குனரா இருக்கலாம், அவர் டைரக்ஷன்ல நடிக்கறது மோதிரக் கை குட்டா இருக்கலாம். அதுக்காக ஓசியில எவ்வளவு நாளைக்குத்தான் உழைக்கிறது?'' என்றவர், சின்னத் திரையிலிருந்து சினிமாவுக்குப் போன தமது கசப்பான அனுபவத்தையும் சொல்லத் தவறவில்லை.

"சினிமால பிரபலமான நடிகையா இருந்துட்டு டீ.விக்கு வந்தா, சிவப்புக் கம்பளம் போட்டு வரவேற்கிறாங்க... இங்கே பத்து மடங்கு சம்பளம் அவங்களுக்கு அதிகம். ஆனால் டீ.விலேர்ந்து நான் சினிமாவுக்குப் போனப்போ... துண்டு ரோல்ஸ்தான் கிடைச்சுது. கேட்டா, உங்க முகம் மக்கள்கிட்ட ரொம்ப எக்ஸ்போஸ் ஆயிடுச்சு... ஃபேஸ் வேல்யூ கிடையாதுன்னாங்க... அவங்க நம்மளை நடத்துற விதம், சம்பளம் எல்லாமே கீழ்த்தரமா இருக்கு'' என்று கொதிக்கிறார்.

இவ்விவகாரங்கள் குறித்து அறிய

சின்னத்திரை நடிகர் சங்கத் தலைவர் வசந்த், செயலாளர் ராஜேந்திரன் இருவரையும் சந்தித்தோம்.

"கடந்த நவம்பர், 2003ல் தோழர் விஜயகாந்த்தான் சங்கத்தைத் தொடங்கி வைத்தார். இந்தக் குறுகிய காலத்துக்குள் மலை போல் குவிந்த புகார்களில் பேமண்ட் பிரச்னைதான் முக்கியமானது. முறைப்படி வரவேண்டிய நிலுவை சம்பளத்தை சங்கம் வாங்கிக் கொடுத்திருக்கிறது" என ஆரம்பித்தவர்களிடம், நிறைய அத்துமீறல்களும், உரிமை பறிப்புகளும் இங்கே சர்வசாதாரணம் என்கிறார்களே?" என்று கேட்டபோது,



• சாருகேஷ்



• ஷாலினி

"அதையெல்லாம் விலாவாரியாகப் பேசுவதென்றால், எங்களை நாங்களே இழிவுபடுத்திக் கொள்வதற்குச் சமம்" என்றனர் முதலில். "என்றாலும் சில விஷயங்களை மட்டும் உங்களோடு பகிர்ந்துகொள்ள முடியும். சினிமா போலவே புரொஃபஷனலாக மாறிவிட்ட டி.வி இன்டஸ்ட்ரியில், நடிப்பை முழு நேரத் தொழிலாக மாற்றிக் கொண்டு வாழ்கிற கலைஞர்களுக்கு, ஒரு சின்ன பிரச்னைகூட பெரிதாகப் பாதிக்கும். முக்கியமாக இவர்களது மன அழுத்தம். இதனால் வரும் தற்கொலை உணர்வு. இதற்குத் தடா போடும் வகையில்தான் பயிற்சி முகாம் நடத்தினோம். மேலும் இதை ஆறு கட்டங்களாகத் தொடர்ந்து நடத்திக் கொண்டிருக்கிறோம். இன்று டிவி சீரியல்கள் தான் நடிகர்களுக்கு வாழ்வு கொடுக்கின்றன. நடிக்க ஒப்பந்தமாகும் கலைஞர்கள் ஊதிய விகிதம், வேலை நேரம், படப்பிடிப்பு சூழல் என்று பல்வேறு விதங்களில் பாதிக்கப்படுகிறார்கள். இதை ஒழுங்குபடுத்தும் நோக்கோடு, தொடர் தயாரிப்பாளர்கள், இயக்குனர்கள், நடிகர்கள் என்று மூன்று தரப்புக்கும் பாதிப்பு ஏற்படாத வண்ணம் அறுபது விதிமுறைகளை உருவாக்கி, தயாரிப்பாளர்கள், இயக்குனர்கள் அனைவருக்கும் அனுப்பி வைத்தோம். இந்த விதிகளை மூன்று தரப்பும் அமர்ந்து பேசி, அவற்றை ஒழுங்குமுறையாகக் கடைபிடிக்கலாம் என்று கடிதம் அனுப்பினோம். ஆனால் இதற்குத் தயாரிப்பாளர் குட்டி பத்மினியிடமிருந்து மட்டும்தான் சாதகமான பதில் வந்தது. மற்ற தயாரிப்பாளர்கள் முன்வரும்வரை எங்களது நியாயமான உரிமைகளுக்காக வெள்ளைக் கொடியுடன் போராடுவோம்" என்று முடித்துக் கொண்டார்கள்.

**- குட்டி ஜெயா**

---

**"யோவ், எதுக்குய்யா டி.வி மேல தார் பூசற...?"**

**"இங்கிலீஸ்ல செய்தி வாசிக்கிறாங்க பாருங்க தலைவரே."**

**- சோலோ செல்வாஷ்**





"தமிழை செம்மொழியா அறிவிச்ச பிறகு இவன் 'நடமாடும் தகவல் களஞ்சிய'மாயிட்டான்டா..!"

"அதுக்கு முன்னாடி என்னவா இருந்தான்?"

"'நோட்டீஸ் போர்டா' இருந்தான்!"

- கே.ஜி.எஸ்

# தொட்டி ஜெயா

தாடி வைத்த முரட்டுக் கதாநாயகன், ஊரிலேயே மிகப் பெரிய தாதாவின் அழகிய மகளைக் காதலிப்பதும், தாதா - அப்பா தன் அரிவாளைச் சுழற்றியபடி கதாநாயகனைத் துரத்திக் கொண்டு ஓடி வருவதும் தமிழ் சினிமாவுக்குப் புதிதல்ல. என்றாலும் தொட்டி ஜெயாவில் இதே கதையை சற்று வித்தியாசமாகவும் கூடுதல் வேகத்துடனும் சொல்லியிருக்கிறார்கள்.

படத்தின் மிகப் பெரிய ப்ளஸ் சிம்பு. கையில் கிடைத்த ஆட்களைப் பிடித்து, முறைத்து, அடித்து, உதைத்து, உடைத்து, மிதித்து, பிழிந்து பயமுறுத்துகிறார்.

பஞ்ச் டைலாக் விடும் ஹீரோக்களை பார்த்திருக்கிறோம். இவர் 'பஞ்ச்' மட்டுமே விடும் ஹீரோ. படத்தில் சிம்பு பேசும் மொத்த உரையாடல்களையும் உள்ளங்கையில் எழுதிவிடலாம். (அதாவது சிம்புவிடம் அடி வாங்கி உடையாத உள்ளங்கையில்).

அவசியமான இடங்களில் அவசியமான அளவுக்கு மட்டுமே நடித்து அசத்தியிருக்கிறார் கோபிகா. குறிப்பாக சிம்புவுடனான மெல்லிய காதல் காட்சிகள் இதமாக நிறைகின்றன. ஒரே ஒரு பொருந்தாத டூயட் உண்டு, குழந்தைகள் கன்னத்தில் வைக்கும் குட்டி மை போல.

அதிபயங்கரமாய்க் கத்தி ஊரைக் கூட்டும் வில்லன்கள் கிட்டத்தட்ட காலாவதியாகிவிட்ட நிலையில் அவர்களுக்கு மறுவாழ்வு கொடுத்து ஆக்ஸிஜன் ஏற்றி உலாவவிட்டிருக்கிறார் டைரக்டர். போதாக்குறைக்கு சீனியாரிட்டி படி சைக்கிள் பார்ட்ஸ், போல்ட் நட், புலி நகம் எல்லாம் பொருத்திய சங்கிலியை தலா ஒவ்வொன்று மாட்டிவிட்டிருக்கிறார். (தலைமை வில்லனின் முக்கால் கிலோ சங்கிலியில் என்னென்னவெல்லாம் கோத்துவிட்டிருக்கிறார்கள் என்று தெரியவில்லை.)

ஒரு சிறிய வெற்றிடத்தைக் கூட விட்டு வைக்காமல் பின்னணி இசையால் படத்தை நிரப்பியிருக்கிறார் ஹாரிஸ் ஜெயராஜ். சண்டை காட்சிகளின் தீவிரத்துக்கு மட்டுமே இசை பொருந்துகிறது. மற்றபடி பாடல்கள் மனத்தில் பதிய மறுக்கின்றன.

காமிரா இயல்பாக இயங்கியிருக்கிறது. நகைச்சுவை காட்சிகள் என்று தனியாக ஒன்று இல்லாதது மிகப் பெரிய ஆறுதல்.

- லஜ்ஜாவதி

## கேப்டன், கேள்விக்குறி, ஆச்சர்யக்குறி!

**பு**திய கட்சியை ஆரவாரமாகத் தொடங்கியிருக்கும் விஜயகாந்த்தை இரண்டு விஷயங்களுக்காக கட்டாயம் பாராட்ட வேண்டும்.

ஒன்று: கடந்த முப்பதாண்டு காலமாக பல சந்தர்ப்பங்களில் தாமும் அரசு நிர்வாகத்தில் உள்ள பலருக்கு லஞ்சம் கொடுக்க நேர்ந்துள்ளது என ஒப்புக் கொண்டவர், அந்த லஞ்ச - ஊழலை ஒழித்துக் காட்டுவேன் என்றும் உறுதி கூறுகிறார்! தமிழகத்தில் - ஏன் - அனைத்திந்திய அளவில் இனி மாறவே மாறாது என்று யாவரும் ஏகமனதாக 'விதியே' என்று ஒப்புக் கொண்டிருக்கிற ஒரு நிலைமையை மாற்றிக் காட்டுகிறேன் என்று இவ்வாறு சூளுரைக்க மிகுந்த நெஞ்சுரம் வேண்டும்.

இரண்டு: பெண்களுக்குத் தமது கட்சி முப்பத்து மூன்று சதவிகித இடங்களை ஒதுக்கும் என்று தயங்காமல் அறிவித்துள்ளார். அரசியலில் நீண்ட காலமாக புரட்சி செய்து வருவதாகக் கூறிக் கொள்ளும் கட்சிகள்கூட இது விஷயத்தில் தயக்கம் காட்டுகின்றன!

ஏற்கெனவே அரசியலில் இறங்கி 'தொழில் முதலீடு' செய்து 'கையைச் சுட்டுக் கொண்ட' கட்சிகளைப் போல், சிந்திக்க வேண்டிய அவசியம் விஜயகாந்துக்கு இல்லை; அவருடையது புதிய கட்சி. ஆதலால் சிக்கலின்றி இப்படியெல்லாம் அறிவிக்க முடியும் என்பது உண்மையே.

ஆனால், விஜயகாந்த் வெறும் வாய்ச்சொல் வீரம் பேச




# கல்கி





2005 செப்டெம்பர் 25
பார்த்திப புரட்டாசி 9
மலர் : 64
இதழ் : 8



வில்லை என்பது அவருடைய இதர கொள்கைப் பிரகடனங்கள் மூலம் உறுதியாகிறது:

தேசிய முற்போக்கு திராவிட கழகம் என்பது கட்சியின் பெயர் என்ற போதிலும் 'திராவிட' என்ற சொல் ஐந்து மொழிகளை உள்ளடக்கியது என பரந்த பார்வையோடு விளக்கம் தந்துள்ளார் விஜயகாந்த்.

ஜாதி அடிப்படையில் உணர்வுகளைத் தூண்டாமல், 'ஜாதி - மத பேதத்தைப் போக்கி நல்லிணக்கம் உருவாக்குவோம்' என்று கூறியுள்ளார். எந்தவொரு அரசியல் தலைவரும் இப்படிப் பேசக் கேட்டு வெகு காலமாகிவிட்டது. அனைவருமே ஜாதி அரசியல், மத அரசியல் அல்லது மத அவமதிப்பு அரசியல்தான் செய்கிறார்கள்.

விவசாயிகளின் நலன் குறித்து தமது கட்சி சிந்திக்கும் என்று விஜயகாந்த் கூறியுள்ளதும் வரவேற்கத்தக்கது. மீனவர், நெசவாளர் நலன் கருத்தில் கொள்ளப்படும்; அவர்களது பிரச்னைகள் தீர்க்கப்படும் என்றெல்லாம் அடித்தட்டு மக்களை அரவணைத்துச் செல்கிறது தேசிய முற்போக்கு திராவிட கழகம்.

நோக்கங்களும் இலக்குகளும் உயர்வாகத்தான் இருக்கின்றன. ஆனால் அவற்றை எவ்வாறு செயல்படுத்திக் காட்டுவார் விஜயகாந்த்? அரசியலிலோ நிர்வாகத்திலோ அவருக்கு என்ன அனுபவம் இருக்கிறது என்று கவலை கொள்ளத்தான் வேண்டியிருக்கிறது. 'மக்கள் ஆதரவு' என்ற பலம் அவருக்குக் கணிசமாக வாய்த்திருக்கிறது; சினிமா பின்னணி என்ற கூடுதல் ஆதாயம் வேறு கை கொடுக்கும்.

ஆனால், வெள்ளித்திரையில் தோன்றும் ஹீரோக்கள் போல் யதார்த்த வாழ்வில் சாதித்துக் காட்டுவது இயலாது.

விஜயகாந்த் தமது அரசியல் பிரவேசத்தை அர்த்தமுள்ளதாக்கச் சில விரதங்களை மேற்கொள்ள வேண்டும்:

- ஜாதி - மத பேதங்கள் பாராட்ட மாட்டோம் என்று சொல்லியிருப்பவர், ஜாதி கட்சிகள் மத அடிப்படைவாத கட்சிகளுடன் தொடர்பு மறுக்க வேண்டும். அக்கட்சிகளிலிருந்து பிரிந்து

வருவோரைக்கூட ஏற்கக் கூடாது.

● லஞ்ச - ஊழலை ஒழிக்க சபதம் எடுத்திருப்பவர், ஊழல் குற்றச்சாட்டு, லஞ்ச - லாவண்ய வரலாற்றுப் பின்னணி உடைய அரசியல்வாதிகளையும் கட்சிகளையும் துணிந்து புறக்கணிக்க வேண்டும். இவர்கள் நீட்டக்கூடிய நேசக் கரங்களையும் பாச அழைப்புகளையும் ஏற்கக்கூடாது.

● பெண்களுக்கு மூன்றில் ஒரு பங்கு தொகுதி ஒதுக்கீடு செய்ய வாக்குறுதி தந்துள்ளவர், அதே முடிவை ஏற்காத வேறு எந்த கட்சியையும் ஆதரிக்கக் கூடாது!

- இந்த விஷயங்களில் பிடிவாதம் காட்டினாலேயொழிய விஜயகாந்தின் கொள்கைகள் செயலாக்கம் பெறவே முடியாது.

ஆனால், இவற்றில் உறுதியாக இருக்கும்பட்சத்தில், தமிழ்நாட்டில் வேறு எந்தக் கட்சியுடனும் தேசிய முற்போக்கு திராவிட கழகம் கைகோக்க முடியாது! தனித்துத்தான் தேர்தல் களத்தில் இறங்க வேண்டும்!

கட்சி தொடங்கி ஒரு சில மாதங்களுக்குள்ளேயே தேர்தல் வந்துவிடும். விஜயகாந்த் ஒரு புதிய அரசியல் சக்தியாக அனைவராலும் உற்று நோக்கப்படுவார். தமிழ்நாட்டின் அனைத்து தொகுதிகளிலும் நின்று ஓரிரு இடங்களை வெல்வதில் அர்த்தமிராது. ஒரு சில இடங்களில் மட்டுமே போட்டியிட்டு, அவை அனைத்திலும் கொள்கைகளை விட்டுக் கொடுக்காமல் ஜெயித்துக் காட்ட முடிந்தால் தமிழ்நாட்டில் ஒரு புதிய அரசியல் சக்தி வேரூன்றி விடும். தொடர்ந்து கொள்கைகளிலும் நேர்மையிலும் அவர் உறுதியாக இருப்பின், கட்சி வளரும்; அனுபவம் பெருகும்.

விஜயகாந்த் சரியான முடிவுகளை எடுத்து இவ்வாறு நடக்க வழிவகை செய்வாரா; இதர கட்சித் தலைவர்கள் அவரை விட்டு வைப்பார்களா? என்பது கேள்விக்குறிதான்.

ஆனால், கட்சித் துவக்க மாநாட்டுப் பந்தலில் தமக்குப் போடப்பட்டிருந்த அலங்கார நாற்காலியை மறுத்துவிட்டு சாதாரண பிளாஸ்டிக் சேரில் கேப்டன் அமர்ந்தது இனிய ஆச்சர்யக்குறி; நல்ல அறிகுறியும்கூட! ○

# நெட் உலக விஜய்-அஜித்!

**தூக்கம்:**

'ஹாவ்வ்வ்...' - என்ன ஆரம்பத்துலேயே கொட்டாவியான்னு கேக்கறீங்களா? தூங்கறதுக்கும் எழுந்தரிக்கறதுக்கும் வழக்கமா ஒரு நேரத்தைக் கடைப்பிடிக்கணும். இளஞ் சூட்டுல ஒரு குளியல். நல்ல புத்தகம், ஜில்லுன்னு இசை இதெல்லாம் தூக்கத்தை சுகமா வர வழைக்கும். இருளும், அமைதியும் தூக்கத்துக்கு ரொம்ப அவசியம். உங்க சாப்பாடை, தூக்கத்துக்கு 2-3 மணி நேரத்துக்கு முன்னாலேயே முடிச்சுக்கணும். காபி, டீ, கூல்டிரிங்ஸ், ஆல்கஹாலுக்குத் தடா. இப்படித் தூங்க மாங்கு மாங்குன்னு ஐடியா கொடுக்குற தளம் sleepfoundation.org தூக்கம் சம்பந்தப்பட்ட வியாதிகள் என்னென்ன, எதுக்குத் தூங்கணும், யார் யார் எவ்வளவு தூங்கணும் என தூக்கத்தைப் பற்றிய விழிப்புணர்வைக் கொடுக்குது.

## வலைபாயுதே



**டௌன்லோட்:**

விஜய் - அஜித் மாதிரி மோதிக்கறது யாருன்னா நெட்உலகத்துல யாஹூவும், கூகுளும்தான். 'சாட்' அப்படின்னாலே நமக்கு ஞாபகம் வர்றது யாஹூ மெஸஞ்சர்தான். அதுக்கு கவுன்டர் கொடுக்க புதுசா வந்திருக்கு கூகுள் டாக்! இதுல சாட் பண்ணலாம். தெளிவா வாய்ஸ் சாட் பண்ணலாம். உடனே எல்லாரும் கூகுள் டாக்கை நோக்கிப் படையெடுக்க, படபடன்னு யாஹூ மெஸஞ்சரும் தன்னை புதுப்பிச்சிகிட்டு தெளிவான வாய்ஸ் சர்வீஸ், இலவச எஸ்.எம்.எஸ்.னு களமிறங்கி இருக்கு! புது யாஹூ மெஸஞ்சரை டௌன்லோட் பண்ண messenger.yahoo.com/- கூகுள் டாக்கை எடுக்க google.com/talk/க்கு போங்க!




**வலைப்பதிவு:**

அபார்ட்மெண்ட் கவிதைகள்:
என் பையனின் காதுகுத்துக்கு
அழைப்பு விடுத்ததுண்டு.
அப்பாவின் பாட்டி
வைகுண்டம் சேர்ந்ததுண்டு.
அப்போதெல்லாம்
வாராக் கூட்டம் வந்தது
எங்களைக் கண்டிக்க -
ஊருக்குப் போகும்போது
குழாய் மூட மறந்தபோது.
(poetraj.blogspot.com வலைப்பதிவிலிருந்து)

- வலைஞன்

# கேள்விகள்!

க.ஒப்பிலி அப்பன்



'எனக்கு மட்டும் ஏன் இப்படி ஆகிறது...? எந்தக் கேள்விக்கும் பதில் சொல்ல முடியாமல், கூனிக்குறுகிக் கொண்டு...'

'சரி... இதை விடுங்கள்... இந்த மனிதர்கள்தாம் ஆகட்டும், ஏன் இப்படி எல்லோரும் சொல்லி வைத்தாற்போல் இதையே கேட்கிறார்கள்...? அலுப்புத் தட்டவில்லை இவர்களுக்கு..?'

சலித்துக் கொண்டான் சிவராமன்...

சிவராமன் ஒழுங்காக பள்ளிக்குப் போகாமல் ஊர் சுற்றினான்... அதனால் பள்ளியில் அவன் பெயரை எடுத்து விட்டார்கள்... 'ஊர் சுற்றி' என்று பெயரெடுத்தான். அவனது வீட்டுக்கு வரும் உற்றமும் சுற்றமும், அவனைப் பார்த்து விட்டால் போதும், "டேய் சிவா... நீ என்ன கிளாஸ் படிக்கிறே...?" என்று கேட்கும். இதற்கு என்ன பதிலைச் சொல்வது? அவர்களது கண்ணிலேயே படாமல் ஓடி விடுவான்...

ஒரு கால கட்டத்தில், இந்தக் கேள்வியும், அவனைப் போலவே அர்த்தமற்றுப் போனது. சிவா வளர்ந்து பெரியவனாகி விட்டான்... "அப்பாடா..." என்று மகிழ்ச்சியடைந்தான் சிவராமன்... ஆனால் அவனது சந்தோஷம் அதிக நாள் நீடிக்கவில்லை... "என்னப்பா சிவராமா... என்ன வேலை பார்க்கறே...?" என்று கேட்க ஆரம்பித்து விட்டனர்... வேலையற்ற இவர்களின் இந்தக் கேள்விக்கு என்ன பதில் சொல்வது? ஒரு சிலர் ஒரு துணைக் கேள்வியையும் சேர்த்து கேட்டனர்... "என்ன சிவா... இன்னும் கல்யாணம் பண்ணிக்கலையா?"

சிவராமனுக்கு இந்தக் கேள்வி கொஞ்சம் சுலபமாக பதில் சொல்லக் கூடிய கேள்வியாகத் தோன்றியது. அதனால் அவன் தன் அம்மாவிடம், தனக்கு உடனடியாக ஒரு கல்யாணத்தைப் பண்ணி வைக்குமாறு நச்சரிக்க ஆரம்பித்தான். மகனுக்கு ஒரு கால்கட்டு போட்டாலாவது பொறுப்பு வருதா என்று பார்க்க சிவாவின் அம்மாவும், ஒரு பெண்ணைப் பார்த்து, அவனுக்குக் கல்யாணம் பண்ணி வைத்தாள்...! திருமணமான இரண்டாம் மாசமே தொடங்கிவிட்டது அந்தக் கேள்வி...

"என்னடா சிவா... எப்படா அப்பா ஆகப் போறே?"

நல்லவேளை... கேள்வி கேட்டவர்களை அதிகமாக அலைக்கழிக்க விடவில்லை அவன்.

திருமணம் ஆன மறு வருஷத்திலேயே சிவராமனுக்கு பெண் குழந்தை பிறந்தது...!

அப்பாடா! தன்னிடம் கேட்கப் பட்ட எல்லாக் கேள்விகளும் இனிதே முடிந்து விட்டன என நினைத்துக் கொண்டிருந்த வேளையில் தான் அந்தச் சம்பவம் நடந்தது.

சிவராமனின் பெண் குழந்தையைப் பார்த்து, அவனது ஒன்னுவிட்ட அத்தை கேட்டாள்... "பாப்பா... கண்ணு.... என்ன கிளாஸ் படிக்கிறே?" ●

# சின்னான் செய்திகள்

பச்சை சென்டிமெண்ட்னு சொன்னவுடனே பச்சக்னு உங்க நெனைவுக்கு வர்றது யாரு? ஆங்... அம்மாவேதான். அம்மாவின் லேட்டஸ்ட் அசத்தலும் ஒரு 'ப' விஷயம்தான். கிட்டத்தட்ட நூத்துக்கும் மேல புதுசா பூங்காங்களை உருவாக்கியிருக்காங்க அம்மா! பழைய பூங்காக்களையும் ரிப்பேர் பண்ணி புதுசாக்கப் போறாங்களாம். அதுல பல பூங்காக்களில் வாக்கிங் போறாப்ல பாதை அமைக்கப் போறாங்களாம்! இந்த வாக்கிங் - வோட்டுப் போட நாம வாக் பண்ணிப் போறப்போ வொர்க் - அவுட் ஆகலாம்னு பட்சி சொல்லுது! அப்புறம் சிங்காரச் சென்னை, பூங்காரச் சென்னையா பச்சையா மாறும். என்ன இப்ப பச்சை சென்டிமெண்ட்டோட மீனிங் புரியுதா!

உண்மையான போலீஸ்காரங்க எப்டி எப்டி இருக்கோணும்னு நம்ம கதாநாயகங்க நெறைய படத்துல செமினார் எடுத்திருக்காங்க! ஆனா நம்ம ரங்கநாதன் (எட்டு) நெசத்துலேயே 'நாந்தான் போலீஸ்'னு நிரூபிச்சிருக்காரு! குரோம்பேட்டை ஸ்டேஷன்ல வேலை பாக்குற இவரு, தன்னோட இன்ஸ்பெக்டர் சராமாரியா லஞ்சம் வாங்குறதைக் கண்டு பிடிச்சு, எல்லாத்தையும் ஒண்ணுவிடாம, ஒற்றுப் பிழை இல்லாம எழுதி தன்னோட சப்-இன்ஸ்பெக்டர்கிட்ட புகாரா கொடுத்திருக்காரு. அந்த லிஸ்ட்ல ரோட்டோர தள்ளுவண்டி டு பீப்பா பீப்பாவா காய்ச்சிறவங்க வரை இருக்காங்களாம்! சமீபத்துலதான் ரங்கநாதன் சிறந்த காவலர் அவார்டு வாங்கினாராம்! இது மேட்டரு!





## சிவாஜியின் ஜோடி!

சி.சி.சி... சிவாஜி பட ஷூட்டிங்கின் துவக்க வேலைகளெல்லாம் புல்லட் வேகத்துல நடக்குதாம். லேட்டஸ்ட் இன்னான்னா, இந்தப் படத்துக்கு ஷங்கர் கூட வொர்க் பண்ண 20 உதவி இயக்குநர்களைத் தேர்ந்தெடுத்து இருக்காங்கன்னு ஒரு நியூஸ் கௌம்பியிருக்கு! ஆத்தாடி, உதவி இயக்குநர்கள் எண்ணிக்கையும், துணை நடிகர்கள் ரேஞ்சுக்குப் போயிடுச்சு. அப்புறம் ஜஸ்க்கு மறுக்கா மறுக்கா வலை வீசிக்கிட்டே இருக்காங்களாம். ஆனா ஒண்ணும் ரெஸ்பான்ஸ் இல்லியாம்! இப்போ பாலிவுட்ல பளபளான்னு வளர்ந்துகிட்டிருக்கிற ஆயிஷா டாக்கியா சிவாஜியில ரஜினி ஜோடியாவோ அல்லது முக்கிய கதாபாத்திரத்திலியோ நடிக்கப் போறது கிட்டத்தட்ட கன்ஃபார்ம்!

அனிதா கோபால் (நானா பயோசிம்), நரசிம்மாச்சாரி (டிராப்பஸ் நெட்வொர்க்), ராஜீத் மனோகர் (கார்னல் பல்கலைக் கழகம்), ஷிலாதியா சென்குப்தா (ஹார்வர்டு மருத்துவ பள்ளி) - இந்த நாலு இந்தியர்களுக்கும் மனமாரப் பாராட்டு சொல்லுங்க! சொல்லிட்டீங்களா! அமெரிக்க மசாசூட்ஸ் தொழில் நுட்ப நிலையம் இந்த ஆண்டு தேர்ந்தெடுத்திருக்கிற உலகின் சிறந்த தொழில் நுட்ப நிபுணர்கள் 35 பேர்ல இவங்க நாலு பேரும் உண்டு! அப்படிப் போடு!

**விமர்சிக்கிறார்**
**'தி ஹிந்து' கேஷவ்.**

"நீங்கள் ஒரு கார்ட்டூனிஸ்டா அல்லது ஆர்டிஸ்டா?'' என்று கோபுலுவைக் கேட்டால்,

''நான் ஒரு ஆர்ட்டூனிஸ்ட்'' என்பார்!

'கோபுலு ஜோக்ஸ்' என்ற இந்தத் தொகுப்பு, அவரை ஒரு கார்ட்டூனிஸ்டாகக் காட்டுகிறதே... அதாவது... சைலன்ட் கார்ட்டூனிஸ்டாக!




சென்ற நூற்றாண்டின் சிறந்த அமெரிக்க ஓவியர் நார்மன் ராக்வெல். கோபுலு அவரைப் பற்றி புகழ்ந்து பேசுவார். தத்ரூபமாக வரைவார். ஹாஸ்யம் அபரிமிதம். அமெரிக்க வாழ்க்கையை அப்படியே பிரதிபலிக்கும். மாடல்களை வைத்து, புகைப்படங்கள் எடுத்து, அதைப் பார்த்து உயிரோவியங்கள் படைப்பவர் நார்மன். ஆனால் கோபுலு ஒரு படி மேலே! அவருடைய கண்கள்தான் கேமரா. கோபுலுவின் தூரிகை அவர் சொல்வதைக் கேட்கும். எந்த விதமான சித்திரமாக இருந்தாலும், அதில் ஒரு நேர்த்தி, அழகுணர்ச்சி, வண்ணம், தத்ரூபம், திகட்டாத நகைச்சுவை என அனைத்தும் பார்ப்பவரை ஈர்க்கும். மாலியின் சிஷ்யர்; எ லெஜென்ட் இன் ஹிஸ் ஓன் லைஃப் டைம்.

'கோபுலு ஜோக்ஸ் தொகுப்பு' 1950-60களில் இருந்த சமூகத்தை ஃப்ளாஷ் பேக்கில் சிரிக்கச் சிரிக்கக் காட்டுகிறது. எல்லாமே லைட் ஹார்ட்டட் ஹியூமராக அமைந்துள்ளன. மனிதர்களைக் கூர்ந்து கவனிக்கும் அவரது சிறப்பியல்பு, கார்ட்டூன்களில் எடுப்பாகத் தெரிகிறது. இதே போல் மாலி, சில்பி, ராஜு, ஸ்ரீதர் போன்றவர்களின் கார்ட்டூன்களையும் விகடன் பிரசுரிக்கலாமே!




# திகட்டாத சிரிப்பு!

கோபுலு ஜோக்ஸ், விகடன் பிரசுரம், 757, அண்ணா சாலை, சென்னை - 600 002. விலை. ரூ 50/-

**புக் பேங்க்**

# தொன்மைக்கு அஞ்சேல்!

“பெரியவரு எறந்துட்டாரு” என்று முனியன் வந்து சொன்னபோது, கண்ணையனுக்கு ஒருவிதத்தில் ‘அப்பாடா’ என்றிருந்தது. அதேசமயத்தில், அடி வயிற்றில் ஒருவிதச் சங்கடமாகவும் இருந்தது.

“முனியா, நீ அங்கயே இரு, தோ வந்துடறேன்” என்றான், கண்ணையன்.

“யாரையாச்சும் கும்பகோணத்துக்கு அனுப்பி, மொதல்ல அவரு பையனுக்கு சேதி சொல்லு” என்றான், குரலில் ஒருவித அவசரத்துடன்.

“பெரீவரு மவன் ஊர்ல இல்லீங்க” என்றான் முனியன். பிறகு, “அதோட, இருந்தாலும், அவர் வர மாட்டாருங் கய்யா” என்றான்.

‘தெரிஞ்சதுதானே? ஒவ்வொருத்தனும் சண்டை போடறச்சே தன் பக்கம்தான் நியாயம்னு நினைக்கிறான், ஆனா எல்லாத்துக்கும் மேல பொது நியாயம்னு உண்டு, என்ன செய்யறது?’ என்று தனக்குள் முணுமுணுத்தான்.

பிறகு, முனியனைப் பார்த்து, ‘உம்’ என்றான், கண்ணையன். “எங்க போயிருக்கிறார் தெரியுமா?” என்றான்.

“எங்கேயோ ஆந்திராவுக்கு ஆபீஸ் வேலையா போயிருக்காரு”

“சரி, நா கும்பகோணத்துல அவரு ஆபீஸ்ல போயி பாத்துட்டு வரேன், சேதி அனுப்பி வரவழைக்கிறேன், ஹூம்... அதோட அந்த ஆபீஸ்ல இவரோட ஒரே ஒரு வெத்துப்பய மட்டும்தான் உதவிக்குனு கெடப்பான். போயி பாப்போம்,” என்றான்.

“இல்லீங்க ஐயா, பெரியவருதான் அந்த மவன் தனக்குக் காரியம் செய்யக்கூடாதுன்னு சொல்லிக்கிட்டே இருப்பாரே” என்றான், முனியன், சற்றுத் தயங்கினவனாய்.

கண்ணையனுக்குச் சுள்ளென்று எரிச்சல் வந்தது. அதை வெளிக்காட்டாமல், சற்றே ஓங்கின குரலில், “முனியா, அனாவசியமா ஏதும் குழப்பாதே, நம்மகிட்டே பெரியவரு ஏதேதோ கோபத்துலயும், விரக்தியிலயும் பேசினத யாரு கிட்டயும் சொல்லிகிட்டுத் திரியதே” என்றான்.

“அதுக்கில்லீங்க ஐயா, அந்த மவனும் வரமாட்டேன்னு... செத்தாலும் வர மாட்டேன்னு... அன்னிக்கு... ஒரு வருசம் ஆயிட்டுது.... சத்தம் போட்டுட்டு.... எப்பவோ தலைமுழுகிட்டதா...”

“அதான் சொல்றேனில்லே, முனியா, உசிரோட இருக்கறவரைக்கும் நிலைமை வேற. செத்தப்பறம் நடக்க வேண்டியது வேற... முதல்ல நீ பெரியவரு குடிசைல காவல் இரு. நான் போய் ஆவறதக் கொஞ்சம் பாத்துட்டு வரேன்” என்று சட்டையை மாட்டிக் கொண்டான்.

சமையலறையில் விஜயா காலைச் சமையலில் ஈடுபட்டிருந்தாள். பானையிலிருந்து தம்ளரில் தண்ணீரை மொண்டு குடித்துவிட்டு, “இருக்கும் போது சொட்டுத் தண்ணிக்குக் கூட வராத பிள்ளைங்க, செத்த பொணத்துக்கு வாய்க்கரிசி போட சொந்த பந்தத்தோட வந்துடுவாங்க” என்றான்

**“ஆமாய்யா, வாயும் வயிறுமா நின்னு அம்மா சொல்லி அனுப்புனாகளே!”**

## ஆதித்யா முரளி

சலிப்பான குரலில்.

அடுப்படி கவனத்திலிருந்து சட்டெனக் கலைந்து திரும்பிய விஜயா, "இது என்ன, காலை வேளைல பேச்சு, அதுவும் புள்ளைத்தாய்ச்சிகிட்டே வந்து?" என்றாள்.

"பெரியவரு இறந்துட்டாரு" என்றான்.

"அடப்பாவமே" என்றாள்.

"பெரிய பட்டணமா இருந்தா, முதியோர் இல்லத்துலயாவது போயிருப்பாரு. கும்பகோணத்துப் பக்கத்துல நம்ம கருப்பூர் கிராமத்துல என்னா செய்யறது, குடிசைல போயாச்சு" என்றான் கழிவிரக்கம் ததும்ப.

"ப்ச்" என்றாள்.

அழுத்திய பாறாங்கல்லுக்குக் கீழே சிக்கக் கொண்டதுபோல வார்த்தைகள் தொண்டைக் குழியில் ஒருவித வலியைத் தந்தன.

அவனோடு முன் அறைக்கு வந்தவள், சட்டென்று ஏதோ ஞாபகம் வந்தவளாய், "ஆங்... அப்புறம்... ஒரு விசயம்..." என்



னாள்.

சிலகணங்கள் தயங்கினாள். பிறகு இழுத்தது போன்ற தொனியில், "தப்பா நெனைக்கக்கூடாது" என்று தொடர்ந்தாள். "அங்கனபோயி, பொணம் தூக்க வேண்டாம்" என்றாள்.

விஜயா சொல்வது புரியாதவனாய், "ஏன்?" என்றான்.

சிறிய மௌன இடைவெளியைத் தாண்டினவளாய், "ஆமாங்க, நா வயித்துப் புள்ளையோட இருக்கறச்ச, நீங்க போயி, அங்க, தூக்கறேன், ஒரு கை குடுக்கறேன்னு, எதுவும் அபசகுனமா செய்யாதீங்க" என்றாள், கெஞ்சுகிற தொனியில்.

"என்ன புள்ள நீ?" என்று முணுமுணுத்தான்.

"முனியா, நீயும் இவரைப் பாத்துக்கோ. பொண்டாட்டி வயித்துப் புள்ளைத்தாய்ச்சியா இருக்கையில, பொணம் தூக்கக் கூடாது, நம்ம சம்பிரதாயம். ஞாபகமா கவனமா இவரைப் பாத்துக்கோ" என்றாள்.

"சரிங்கம்மா," என்று தலையாட்டினான், முனியன்.

கண்ணையன் பதிலேதும் பேசாமல் நகர்ந்தான்.

அழுகைச்சத்தம் இல்லாத வீடு... பெரியவரின் குடிசை. குப்பென்று ஒருவித வாடை. கண்ணையன் உள்ளே நுழைந்தான். கட்டிலில் மல்லாந்து கிடந்த பெரியவரிடம் நெருங்கினான். இரண்டு கண்களிலிருந்தும் பக்கவாட்டில், காது வரையில், நீர்க்கோட்டின் கறைகள் காய்ந்து, அழுக்குக் கோடுகளாய்த் தெரிந்தன. அழுதுகொண்டே செத்திருக்கிறார் என்று புரிந்தது.

நேரம் நகர மாட்டேன் என்று கனத்துக்கிடந்தது. கண்ணையனும், கூட இருந்த நால்வரும், 'என்னடா இது' என்பதுபோல வெளியே நின்றிருந்தார்கள். மகன் எங்கிருக்கிறான் என்பது தெரியவில்லை. நிரந்தரமற்ற கம்பெனி வேலையில் நிச்சயமற்ற ரூர்களும், தரகு வியாபாரமுமாய் சுற்றிக் கொண்டிருப்பவனை எங்கே என்று கண்டுபிடித்துச் சேதி சொல்ல! ஆபீஸில் யாருமில்லை.

அந்தச் சிறிய தரகு ஆபிஸில், ஒரே ஒரு ஆபீஸ் பையன் மட்டும் ஏதும் தெரியாதவனாய் உட்கார்ந்திருந்தான்.

"ஒனக்கும் எனக்கும் வாழ்ந்தாலும் இல்லை... செத்தாலும் இல்லை" என்று பேசிப் பேசி, பேசியதையே வாழ்ந்து வாழ்ந்து, அதுவே இப்போது தவிர்க்கவும் மாற்றவும் முடியாத நிதர்சனமாய் நிறைந்து கொண்டிருக்கிறது.

திணிக்கப்பட்ட நிர்ப்பந்தத்தைப் போல ஒரே புழுக்கமாயிருந்தது. புழுக்கத்தில், வெயிலின் அனலில், 'இனி அடுத்து என்ன செய்யலாம்' என்கிற கேள்விக்குறிகளாய் அவர்கள் நின்று கொண்டிருந்தார்கள்.

"பெரியவரு சொன்னமாதிரியே கடைசில ஆயிட்டது" என்று முணுமுணுத்தான் முனியன், "அவரு மவன் கத்திப்புட்டுப் போனமாதிரியே அவரக் காண முடியலையே" என்று சலித்துக்கொண்டான்.

உடனே இன்னொருவர், "சரி, அதுக்காக, நாம காரியம் பண்ண முடியுமா?"

"அப்பால மவன்காரன் வந்து எப்படி செய்யப் போச்சுன்னு நம்ம கொறவளைய புடிச்சா...?" என்று இழுத்தான்.

"ஆமாய்யா, நடைப்பொணமா

"என் மகனும், மருமகளும் தனியா வாழணும்னு ஆசைப்பட்டாங்க..."

"தனிக்குடித்தனம் போயிட்டாங்களா?"

"ஊஹூம்... டைவர்ஸ் வாங்கிக்கிட்டாங்க..."

- ஆனந்தன்



பெரியவரு கெடந்தப்பவே மவனுக்கு ஒண்ணுமில்லே. இப்போ, தனிப் பொணத்துக்கு வாரிசா வந்து, கொரவளைய புடிப்பானாம்'' என்று கேலி பேசினான், முனியன்.

"சரி, சரி" என்று சற்று தூக்கலான தொனியில் கண்ணையன் நடுவே புகுந்தான். "நடக்க வேண்டியது நடக்கல. நாம அடுத்து ஆவறதப் பாப்போம்" என்றான்.



''பிக்பாக்கெட் அடிச்சுட்டு ஓடுற உன்னை, துரத்திக்கிட்டு வர்ற போலீசைக் கண்டு பயப்படாம நின்னுட்டே...?''

''மாமூலை இப்படியெல்லாம் துரத்திக்கிட்டு வந்து, கேட்கக்கூடாதுன்னு கறாரா சொல்லப் போறேன்''

- அவ்வா இக்பால்

சில நிமிடங்களில் மூங்கில் கழிகள், தென்னை ஓலை, கயிறு, நெருப்புச்சட்டி எல்லாம் வந்து சேர்ந்தன.

தனிமைப்பட்டுப் போன முதுமையின் போராட்டத்துக்கு சாட்சிகளாய் இருந்த அவர்கள், அந்தப் போராட்டத்தைவிட தனித்துப் பிணமாய்க் கிடந்த அவலத்துக்கு, தீர்ப்புகளாய்ச் செயல்பட்டார்கள்.

பிணத்தைத் தூக்கிவந்து பாடையில் போட்டுக் கட்டினார்கள். கண்ணையன் பெரியவரின் முகத்தையே உற்றுப் பார்த்தான். சட்டென்று உள்ளே சென்று தண்ணீர்ப்பானையில் தனது மேல் துண்டை நனைத்து வந்தான்.

பெரியவரின் முகத்தில், கண்களின் இரண்டு பக்கத்திலும் கறையாய் இறங்கியிருந்த கண்ணீரின் கோடுகளை ஈரத்துண்டால் துடைத்து எடுத்தான்.

பிறகு திரும்பி, அவன் எடுக்கப்போன தீச்சட்டியை, முனியன், "ஐயா, எங்கிட்ட தாங்க" என்று வாங்கிக்கொண்டான்.

இறுகிப் போயிருந்த எல்லாருடைய முகத்திலும், காரணம் புரியாத கண்ணீர்த் துளி. பிணத்தின் முன்பக்க பாடையில் தன் தோளைக் கொடுக்கக் குனிந்தான், கண்ணையன்.

முனியனுக்குச் சொடீர் என்று நினைவுக்கு வர, கண்ணையனை நெருங்கினான். "ஐயா, வீட்டுல, கௌம்பும்போது அம்மா சொன்னது..." என்று இழுத்தான்.

பதிலேதும் சொல்லாமல் முனியனையே பார்த்தான்.

முனியனின் குரல் தொடர்ந்தது. "ஆமாய்யா, வாயும் வயிறுமா நின்னு அம்மா சொல்லி அனுப்புனாகளே,'' என்று மெதுவாக ரகசியம் போலச் சொன்னான், ''சம்பிரதாயத்த மீற வேணாய்யா" என்று கெஞ்சுவது போலச் சொன்னான்.

கண்ணையன் சில கணங்கள் மவுனமாய் முனியனையே வெறித்துப் பார்த்தான். முனியனைப் பார்த்துப் பார்வையை அசைத்தான். உதட்டுக்கு மேலே தன் வலதுகை ஆள்காட்டி விரலை நெடுக்காக வைத்து, 'ஏதும் பேசாதே' என்பது போல் மெல்லத் தலையை அசைத்தான்.

"ம் கிளம்பலாம்" என்ற கண்ணையனின் அடித்தொண்டைக் குரல் மற்றவர்களை அசைத்தது. தூக்கினார்கள்.

"ஐயா... சம்பிரதாயத்த..." என்று மறுபடியும் தடுப்பவன்போல இழுத்தான் முனியன். கால்களை முதல் அடி எடுத்து வைத்த கண்ணையனின் குரல் அந்த மௌனத்தைக் கிழித்தது. ''முனியா'' என்று கூப்பிட்டுச் சில விநாடிகள் நிறுத்திவிட்டுச் சொன்னான், "முனியா, மனிதாபிமானம் மட்டும்தான் எப்போதும் நடக்க வேண்டிய சம்பிரதாயம்!"



# தெம்மாங்குக் குரல்; தேன் பொழியும் விரல்!

சென்னை பாரதிய வித்யாபவன் அரங்கில் அமர்ந்திருந்த கல்கி அன்பர்களை, காலச்சக்கரம் ஏதும் இல்லாமலேயே கல்கி வார இதழின் வெள்ளி விழா காலத்துக்கு ரீ-வைண்டு செய்து அழைத்துக் கொண்டு போனார் கல்கி ராஜேந்திரன்.

"வெள்ளிவிழா நாவல் போட்டியில் பரிசுக்குரிய




• களை கட்டும் கச்சேரி!



• ஆணையாளர் நடராஜ்

நாவலைத் தேர்ந்தெடுக்க நடுவர்களின் கூட்டம் நடந்து கொண்டிருக்கிறது. ஒரு பக்கம் மாண்பமை நீதிபதி மகராஜன், இன்னொரு பக்கம் இலக்கிய ஜாம்பவானான கி.வா.ஜ. நீதிபதி, உமா சந்திரனின் 'முள்ளும் மலரும்' நாவலை சிலாகித்துப் பேச, கி.வா.ஜ. ரா.சு. நல்ல பெருமாள் எழுதிய 'கல்லுக்குள் ஈரம்' நாவலின் பெருமைகளை எடுத்துச் சொல்கிறார். முதல் பரிசுக்குரிய நாவல் எது என்பது குறித்த அந்த அறிவார்ந்த இலக்கிய சர்ச்சை என்றைக்கும் மறக்காது" என்று கூறியவர், அந்த விவாதத்தை எப்படி அன்றைய கல்கி ஆசிரியர் சதாசிவம் முடித்து வைத்தார் என்பதையும் குறிப்பிட்டார்.

"இரு தரப்பு வாதங்களும் ஏற்கக் கூடியவைதான். ஆனால், நீதிபதியின் தீர்ப்பை ஏற்றுக் கொள்ளுகிறேன்" என்று கூறினாராம் சதாசிவம்!

இப்படியாக, அற்புதமான இலக்கிய விவாதத்தின் முடிவில் வெள்ளி விழா நாவல் போட்டியில் முள்ளும் மலரும் நாவலுக்கு முதல் பரிசு கிடைத்தது. பின்னர் திரைப்படமாகவும் வந்த அந்த நாவலை எழுதிய உமா சந்திரனின் மகன்தான், சென்னை மாநகர காவல்துறை ஆணையாளரான ஆர். நடராஜ். கடந்த செப்டெம்பர் 9 அன்று கல்கி கிருஷ்ண மூர்த்தி நினைவு அறக்கட்டளை நடத்திய





• விழா நாயகர்!



• சுபிக்ஷா ரங்கராஜன்



• விருதுக்குரியவர்களுடன்...

அமரர் கல்கி பிறந்த நாள் விழாவின் தலைமை விருந்தினர் அவர் தான்.

இனிய குரலில் இறை வணக்கம் பாடி, விழாவைத் துவக்கி வைத்தார் சுபிக்ஷா ரங்கராஜன். 'வருவாய் கண்ணா' என்ற பாரதியின் பாடல், நிகழ்ச்சியின் சிறப்புக்கும் சுபிக்ஷாவின் எதிர்காலத்துக்கும் கட்டியம் கூறுவதாக அமைந்தது.

அறங்காவலர்களுள் ஒருவரான கோபாலன், 'மிகச் சிறிய அளவில் தொடங்கப்பட்ட கல்கி கிருஷ்ணமூர்த்தி அறக்கட்டளை, இன்று ஆலமரமாய் வளர்ச்சியடைந்துள்ளதைக் குறிப்பிட்டார். தகுதியுள்ள, ஆனால் பொருளாதாரத்தில் பின்தங்கிய மாணவர்களுக்கு உதவித் தொகை வழங்கி வரும் இவ்வறக்கட்டளை, திறமையான இளம் இசைக் கலைஞர்களுக்கு விருதும், பரிசும் வழங்கி ஊக்குவிக்கிறது. இதுவரை இருபத்தைந்து லட்சத்துக்கும் மேற்பட்ட உதவித் தொகை, மூவாயிரத்துக்கும் மேற்பட்ட மாணவ, மாணவிகளுக்கு வழங்கப்பட்டிருக்கிறது. முதல் ஆண்டில் ரூபாய் பத்தாயிரம் என்று எளிமையாகத் தொடங்கிய கல்வி உதவித் தொகை, இவ்வாண்டு, இரண்டு லட்சத்து இருபத்தேழாயிரத்து நாநூறு ரூபாயை எட்டியிருக்கிறது.

இந்த ஆண்டு விருது பெற்ற இளம் இசைக் கலைஞர்கள், சிக்கில் குருசரண், வயலின் வரதராஜன். சிக்கில் குடும்பத்து விறுவிறுப்பு, செம்மங்குடி பாணியின் கம்பீரம் - இவற்றைத் தமது தெம்மாங்குக் குரலால் தையல் இன்றி இணைக்கும் திறமைசாலி என்று விழாவில் வாசித்து அளிக்கப்பட்ட விருதுப் பத்திரத்தில் குருசரண்பற்றிப் பெருமையுடன் குறிப்பிட்டிருந்தனர் அறக்கட்டளையினர். இதுவரை கல்கி நினைவு விருது பெற்ற இசைக் கலைஞர்களில் மிக இளையவர் என்ற பெருமையும் குருசரணுக்கு உண்டு.

"இனிமை, நூதனம் இரண்டையும் வில்லிலும், விரலிலும் காட்டும் வித்தகம் கொண்ட வயலின் வரதராஜன் ஏற்கெனவே வாங்கியுள்ள பரிசுகள் ஏராளம்; கலைஞர்கள் விரும்பும் கலைஞர்" என்று வரதராஜனைப் புகழ்ந்தது விருதுப் பத்திரம்.



இருவருக்கும் விருதுகளை வழங்கி, கௌரவித்த ஆணையாளர் நடராஜின் காக்கிச் சீருடைக்குள் ஓர் இலக்கிய ரசிகரும் ஒளிந்து கொண்டிருக்கிறார் என்கிற ரகசியம், அவரது தலைமை உரையில் வெட்டவெளிச்சமாகிவிட்டது.

"இளைஞர்களைக் கவரும் விதமாக இன்று வண்ணக் கோலம் பூண்டிருக்கிறது கல்கி" என்று அவர் கூறியதைக் கேட்டதும் கைத்தட்டல். கல்கி வெள்ளிவிழா நாவல் போட்டியின் போது, நடுவர்களிடையில் நிகழ்ந்த இலக்கிய விவாதத்தை கல்கி ராஜேந்திரன் சொன்னாரா! கட்...

அதன் அடுத்த காட்சியை நினைவு கூர்ந்தார் நடராஜ்:

"நாற்பது வருடங்களுக்குமுன், கல்கி தோட்டத்தில் வெள்ளி விழாப் போட்டிகளின் பரிசளிப்பு நிகழ்ச்சி நடைபெற்றது. ராஜாஜி பரிசுத் தொகையான பத்தாயிரம் ரூபாய்க்குரிய காசோலையை பார்வையாளர்களுக்கு உயர்த்திக்காட்டி, "பத்தாயிரம் ரூபாய் பரிசு" என்று சொல்லி, அதனை என் தந்தையாரின் கையில் கொடுத்துவிட்டு, அவர் தலைமீது தன் இரு கைகளையும் வைத்து ஆசீர்வதித்தார். எங்கள் குடும்பத்தினர் அனைவருமே அந்த விழாவில் கலந்து கொண்டோம். அந்தப் பரிசும், பணமும் எங்கள் குடும்பத்தில் ஒரு திருப்பு முனையை ஏற்படுத்தின; அப்போது மிகவும் உதவியாகவும் இருந்தன" என்றார்.



• பார்வையாளர்களின்...

"கல்கி, சரித்திரக் கதைகளின் பிதாமகன். பெண்களிடையே அந்தக் காலத்தில் படிக்கும் பழக்கம் உருவாகக் காரணமாயிருந்தவர். அவரது நாவல்கள் மட்டுமில்லை; விமர்சனங்கள், சிறுகதைகளையும் நான் விரும்பிப் படித்திருக்கிறேன். 'கைதியின் பிரார்த்தனை' என்ற அவரது சிறுகதை என் நினைவுக்கு வருகிறது. கதா நாயகன் மணிக்கு முப்பத்தைந்து மைல் வேகத்தில் தனது வாகனத்தில் பறப்பான். அதைப் பற்றிக் குறிப்பிடுகிறபோது, 'கைலாசம் போகிற வேகத்தில், அவனை போலீஸ் கமிஷனராலேயே தடுத்து நிறுத்த முடியாது. சாதாரணப் போலீஸ்காரர் என்ன செய்ய முடியும்!" என்று எழுதியிருப்பார். ஆக சாலைவிதிகளை மீறுவது அந்தக் காலத்திலும் இருந்திருக்கிறது" என்று கூறி பார்வையாளர்களின் சிரிப்பில் இணைந்து கொண்டார்.

விருது வழங்கப்பெற்ற இளம் இசைக் கலைஞர்களுக்கு இன்னொரு கௌரவமும் கிடைத்தது. குருசரணின் குரு வைகல் ஞானஸ்கந்தன், வரதராஜனுக்கு இசைப் பயிற்சி அளித்து வரும் காஞ்சி ஜனார்த்தனன், டி.வி. கோபாலகிருஷ்ணன் ஆகியோரும் விழாவில் கலந்து கொண்டு, தமது சீடர்களுக்கு வாழ்த்துரை வழங்கினார்கள்.

ஏற்புரை ஆற்றுமாறு கல்கி ராஜேந்திரன், விருது பெற்றவர்களைக் கேட்டுக் கொள்ள, கல்கி விருது வழங்கப்படுவது குறித்து பெருமிதம் அடைவதாகவும், இந்த விருதினை, தமது குருநாதருக்குச் சமர்ப்பணம் செய்வதாகவும் குறிப்பிட்டார் குருசரண்.

"அடுத்த பிறவி என ஒன்று இருந்தால் இதே பெற்றோருக்குப் பிள்ளையாகப் பிறந்து, இதே குருநாதர்களிடம் பயின்று, மறுபடி கல்கி விருது வாங்க வேண்டும்" என்று ஆசைப்படுவதாக வயலின் வரதராஜன் கூறியபோது பலமான கைத்தட்டல்!

நிகழ்ச்சியின் முன் பாதி, இலக்கிய மணம் வீசிய ஜனரஞ்சக விழா என்றால், அதன் பின் பாதியான கச்சேரி, கலை



மணம் கமழ்ந்த தேர்த் திருவிழா!

விருதுப் பத்திரத்தில் குறிப்பிட்டது போலவே சிக்கில் குருசரணுக்கு தெம்மாங்குக் குரல்தான்! வினாயகர் துதியை ரீதிகௌளையில் விருத்தமாகப் பாடிவிட்டு, 'தத்வம் அறிய தரமா' என்று முழுமுதற் கடவுளிடம் கேள்வி எழுப்பி ஆரம்பித்தார் குருசரண். வரதராஜனின் ஆதரவும், மூத்த மிருதங்க 'வித்வான் ஸ்ரீ முஷ்ணம் ராஜாராவின் போஷிப்பும், கடம் எஸ்.வி.ரமணியின் ஒத்துழைப்பும் இணைந்து, கலகலவென்று முன்னேறியது கச்சேரித் தேர்.

குருசரண் 'கஞ்சதளாயதாக்ஷி' பாட, காமாக்ஷி தங்க ரதத்தில் ஒய்யாரமாய் வலம் வந்தாள். இடையே ராஜாராவ் திச்ர நடையில் ஒரு வெற்றிடத்தை நிரப்ப, அந்த மிடுக்கைப் பிடித்துக் கொண்டு அடுத்து வந்த ஹிந்தோள கீர்த்தனைக்கு, திச்ர நடையிலேயே கற்பனை ஸ்வரத்தைத் தொடங்கினார் குருசரண். வரதராஜனும், ராஜாராவும், ரமணியும் சளைக்காமல் அந்த 'தகிட' காரத்தைத் தத்தமது கற்பனைகளுக்கு உட்படுத்த, பரவசமானார்கள் ரசிகர்கள்.

ஹிந்தோளத்தில் குருசரண் தேர்ந்தெடுத்தது ஒரு தமிழ்க் கீர்த்தனை. ஆலாபனையில் சம்பிரதாயமான வடிவத்துக்குள் சங்கதிகள் வேலைப்பாடு செய்து முடித்து, வரதராஜன் அதைத் தேன் பொழிவதுபோல் எதிரொலித்து அமைந்ததும் தொடங்கிய அந்த 'மா ரமணன் உமா ரமணன்' பாட்டு, அத்தனை பேரையும் பழைய நினைவுகளில் மூழ்கி எழச் செய்தது. 'ஏதைய்யா கதி?' (ஜோதி ஸ்வரூபிணி ராகத்தில் கோடீஸ்வரய்யர் கீர்த்தனை) 'சரவணபவ குகனே' (மத்ய மாவதி-பாபநாசம் சிவன்) என்று பெரும் பாலும் தமிழ்ப் பாடல்களாலேயே கச்சேரியை வளர்த்துக் கொண்டு போனார் குருசரண். 'அன்னையோடு தந்தை நீ வாழ்வினில் அனைத்தும் நீ என்று நம்பினேனே' என்ற அடியில் உருக்கமாக நிரவல் செய்து, அந்த உருக்கம் குலையாமல் கற்பனை ஸ்வரங்களும் பாடி, தனியாவர்த்தனத்துக்கு அவர் சமிக்ஞை தர, 'அன்னையும் தந்தையுமாக முருகன் இருக்கையில் நமக்கென்ன குறை' என்பது போல் ராஜாராவ்-ரமணி அணி தனியாவர்த்தனத்தை மாறுபட்ட 'மூட்'இல் ஆரம்பித்து, விதவிதமான கோர்வைகளை எடுத்து விட்டு, அமர்க்களமான தீர்மானத்தில் இணைந்து கைத்தட்டலை அள்ளிக் கொண்டனர்.



• ... ஒரு பகுதி!

பிற்பகுதியில் குருசரண் பாடிய நயமுள்ள பாடல்களுள் இரண்டு, கல்கி இயற்றியவை:

'தவமும் பலித்ததம்மா', 'சோர்வு கொள்ளாதே மனமே!

இவற்றுள் முந்தையது மஹாகவிக்கு அமரர் கல்கி சூட்டிய புகழாரம். இரண்டாவது, 'தேஷ்' ராகத்தில் அமரர் கல்கி அடிக்கடி தமக்குத்தாமே பாடிக் கொண்ட பாடல். இதுவரை ஒலிப்பதிவாகாத அப்பாடலை, குருசரண் பொருளும் நயமும் உணர்ந்து பாடி நெகிழ்ந்தார், நெகிழ்த்தினார்.

இசைக் கச்சேரி கேட்டு ரசித்துவிட்டுப் புறப்பட்டவர்களுக்கு, வாயிலில் இன்னொரு இசை அனுபவம் காத்திருந்தது. அமரர் கல்கி 'மீரா யாத்திரை' என்ற தலைப்பில், திருமதி எம்.எஸ். நடித்த 'மீரா' திரைப்படம் எடுக்கப்பட்டபோது எழுதிய கட்டுரைகளின் தொகுப்பு நூல் (வானதி வெளியீடு), அனைவருக்கும் அன்பளிப்பாக வழங்கப்பட்டது.

தொகுப்பு: **எஸ்.சந்திரமௌலி**

படங்கள் : **ஸ்ரீஹரி**

# சிறையிலிருந்து

அது மத்தியதர வர்க்கத்தைச் சேர்ந்த ஒரு குடும்பம். அந்தக் குடும்பத் தலைவிக்கும், பிள்ளைகளுக்கும் தங்களுடைய வீட்டில் இருக்கும் ஹைதர்அலி காலத்து டீ.விக்குப் பதிலாக, ஒரு புது டீ.வி வாங்க வேண்டும் என்று ஆசை. ஒரு பண்டிகைகாலத் தள்ளுபடி விற்பனை நேரத்தில், பழைய டீ.வியைக் கொடுத்துவிட்டு, தவணை முறையில் பணம் செலுத்த ஒப்புக்கொண்டு, ஒரு புது டீ.வியை வாங்கிக்கொண்டு வந்தார், அந்தக் குடும்பத் தலைவர்.

புது டீ.வி. ஜோராக இருந்தது. படங்கள் தெளிவாகத் தெரிந்தன. குடும்பமே புது டீ.வியில் நிகழ்ச்சிகளைப் பார்த்து சந்தோஷப்பட்டது. ஒருவாரம் போல ஆகி இருக்கும். ஸ்கூலிலிருந்து வந்ததும் பையன் டீ.வி சுவிட்சைப் போட்டான். ஆனால் அது வேலை செய்யவில்லை.

"நான் ஒரு மணிக்கு மெகா சீரியல் பார்த்தேனே! நன்றாகத்தானே இருந்தது டீ.வி. இப்போது ஏன் படம் தெரியலை? அப்பாவுக்கு போன் பண்ணு!" என்றாள் அம்மா.

"டீ.வி வாங்கின ஷோரூமுக்கு போன் பண்ணிச் சொல்" என்றார் அப்பா.

இரண்டு மணி நேரத்தில் ரிப்பேர் ஆன டீ.வியைச் சரி செய்ய சர்வீஸ் இன்ஜினீயர் வந்துவிட்டார். டீ.வி பெட்டியைச் சோதனை செய்துவிட்டு, "மேஜர் பிராப்ளம்! பிக்சர் ட்யூப் போயிடுச்சு!" என்று டெக்னிக்கலாக, சில பல புரியாத வார்த்தைகளைச் சொன்னதும், மொத்தக் குடும்பமும் காற்றுப்போன பலூன் ஆனது.

தொடர்ந்து, "கவலைப்படாதீர்கள்! நீங்கள் எங்களைப் போன்ற உலகத் தரம் வாய்ந்த நிறுவனத்திலிருந்து டீ.வி வாங்கி இருக்கிறீர்கள். எங்கள் தயாரிப்புகள் அனைத்துக்கும் இரண்டு வருட உத்தரவாதம் உண்டு. எனவே இந்த ரிப்பேர் ஆகிவிட்ட டெலிவிஷனை நான் எடுத்துக் கொண்டு போகிறேன். மூன்று நாட்களுக்குள், ஒரு புதிய டீ.வியை நானே வீட்டுக்கு எடுத்துக் கொண்டு வந்து டெலிவரி செய்கிறேன். உங்களுக்கு ஏற்பட்டுவிட்ட சிரமத்துக்கு வருந்துகிறேன்!" என்று சொன்னவுடன்தான் எல்லோருக்கும் மூச்சு வந்தது.

பன்னாட்டு கம்பெனியாயிற்றே! சொன்னபடியே மூன்றாவது நாள் புது





• சுனந்தாஜி - பார்த்தசாரதி

# வெளியே வா!

டெலிவிஷனைக் கொண்டு வந்து கொடுத்துவிட்டார்கள்.

ஆக, நாம் பத்து அல்லது பதினைந் தாயிரம் ரூபாய் கொடுத்து வாங்குகிற டீ.விக்கு, இரண்டு வருட உத்தரவாதம் தரப்படுகிறது. ஆனால் மனிதர்களுக்கு

ஏதாவது உத்தர வாதம் உண்டா?

இன்றைக்கு உயிருடன் இருக்கிற மனிதன், நாளை உயிருடன் இருப்பான் என்று யாராவது உத்தரவாதம் கொடுக்க முடியுமா? உயிருக்கே - மனித வாழ்க் கைக்கே கியாரண்டி இல்லாதபோது, மனிதனின் பேர், புகழ், அவன் சேர்க்கும் சொத்து, சுகங்கள் இவை மட்டும் எப்படி நிரந்தரமாக அவனிடமே தங்கி இருக் கும்?

இன்றைக்கு இருக்கும் பணமும், இர

## சுனந்தாஜி

வசதிகளும் நாளைக்கு உங்களிடம் இல்லாமல் போய்விட்டால், உங்கள் மன நிலை எப்படி இருக்கும்? அன்பு நண்பர்களே! இந்தப் பெயர், பணம், இதர வசதிகளையும், உங்கள் மன அமைதி, நிம்மதியையும் ஒன்றோடொன்று தொடர்பு படுத்திக்கொள்ளாதீர்கள். புகழையும், பணத்தையும் மற்ற சௌகரியங்களையும் உங்கள் கட்டுப்பாட்டில் வைத்துக் கொள்ளுங்கள். தயவுசெய்து, ஒரு போதும், அவற்றுக்கு அடிமை ஆகி, உங்கள் சுதந்திரத்தை இழந்துவிடாதீர்கள். மனநிம்மதியைத் தொலைத்து விடாதீர்கள்.

மனிதன் என்பவன், பறவைகளிலிருந்து, மிருகங்களிலிருந்து முற்றிலுமாக மாறுபட்டவன். மனித வாழ்க்கையை, பறவைகளின், மிருகங்களின் வாழ்க்கையைப் போல, ஒரு குறிப்பிட்ட காலகட்டத்தில் நிகழும் உடல் அவயங்களின் இயக்கத்துடன் ஒப்பிட்டு விடக்கூடாது. மனித வாழ்க்கைக்கு அர்த்தம் உண்டு. அதை முதலில் எல்லா மனிதர்களும் புரிந்துகொள்ள வேண்டும். பின், வாழ்க்கைக்கு அந்த அர்த்தத்தைக் கொடுக்க வேண்டும். அர்ச்சுனன், பகவான் கிருஷ்ணரிடம், "எனக்கு எதிர்ப் பக்கத்தில் நிற்பவர்கள் எல்லோரும் எனக்குச் சொந்தம்; அவர்களுடன் போராடி, அவர்களைக் கொல்ல என்னால் எப்படி முடியும்?'' என்று கேட்கிறான். அப்போது கிருஷ்ணர், "பாரம்பரியம் மிகுந்த இந்த பாரத பூமியில் பிறந்த நீ, இப்படிப் பேசக்கூடாது. குடும்ப உறவு, சொந்த பந்தம் என்ற சிறையிலிருந்து நீ முதலில் வெளியில் வா!'' என்கிறார்.

பகவத்கீதையை மேற்கோள் காட்டி, குடும்பம், தொழில், பெயர், புகழ் என்ற சிறையிலிருந்து விடுவித்துக்கொள்ளும்படி நான் சொல்லுவதை நீங்கள் சரியானபடி புரிந்துகொள்ள வேண்டும்.

'ஆஹா! பகவான் சொல்லியதை சுனந்தாஜியும் சொல்கிறார்! அந்தக் கருத்து சரிதான்! குடும்பச் சிறையிலிருந்து நம்மை விடுவித்துக் கொண்டால் என்ன?' என்று நினைத்து வீட்டுக்குப் போய் மனைவியிடம், "நான் சுதந்திரமான மனிதனாவது என்று முடிவு செய்துவிட்டேன். இனிமேல், உங்களுக்கெல்லாம் அடிமையாக இருக்கப்போவதில்லை. அது மட்டுமில்லை; என் பிசினஸையும் இனிமேல் நீங்களே பார்த்துக்கொள்ளுங்கள். நான் எல்லாவற்றுக்கும் முழுக்குப் போட்டுவிட்டு சுதந்திரமான, சந்தோஷமான, மனத் திருப்தி உடைய மனிதனாக என் மீதி வாழ்நாளைக் கழிக்கப் போகிறேன்'' என்று சொல்லாதீர்கள்.

அப்படிச் சொன்னால், "இவர் வீட்டை விட்டு, பகவத்கீதை சொற்பொழிவு கேட்கப் புறப்பட்டபோதுகூட நன்றாகத்தானே இருந்தார். இவருக்கு என்ன ஆகிவிட்டது?' என்று நினைத்து விடுவார்கள். எனக்கு டெலிபோன் செய்து, "அம்மணி! உங்கள் சொற்பொழிவைக் கேட்டுவிட்டு வந்த என் கணவர் அடிமைத்தனம், விடுதலை, என்றெல்லாம் பிதற்றுகிறாரே! என்ன நடந்தது?'' என்று கேட்பார்கள்.

அது போன்ற அபத்தங்கள் எல்லாம் நடக்க வேண்டாம். குடும்பப் பொறுப்புகளைத் தட்டிக் கழிப்பது, ஆன்ம விடுதலை ஆகாது!



உங்கள் குடும்பத்தில், உங்கள் அலுவலகத்தில், தொழிலில், இந்தச் சமுதாயத்தில், இந்த நாட்டில் உங்களுக்கு என்னென்ன பொறுப்புகள் இருக்கின்றனவோ, அவற்றில் எதையும் நீங்கள் தட்டிக் கழிக்கக்கூடாது. அந்தப் பொறுப்புகளை சரியானபடி உணர்ந்து நிறைவேற்றுங்கள்; கடமையை ஆற்றுங்கள். இவையெல்லாம் புற விஷயங்கள். அடிமைத்தனத்திலிருந்து விடுவித்துக் கொள்வது என்பது, உங்கள் மனம் சம்பந்தப்பட்ட விஷயம். இரண்டுக்கும் இடையில் உள்ள வித்தியாசத்தைத் தெளிவாகப் புரிந்து கொள்ளுங்கள். மனம் தெளிவாக இருந்தால்தான் நூலிழை அளவேயுள்ள அந்த வித்தியாசத்தை உங்களால் புரிந்து கொள்ள முடியும்.



''கூட்டணிக் கட்சியில, தன் கட்சியை இணைக்கப் போறேன்னு போன அவர் கிட்ட, கூட்டணித் தலைவர் கோவிச்சுக் கிட்டுப் போறாரே... என்னாச்சு?''
''யோவ்! அவர் இன்னும் கட்சியே ஆரம்பிக்கலையாம்!''
- அவ்வா இக்பால்

வெட்ட வெளியில் ஒரு பெரிய இரும்புத்தூண் நிற்கிறது. கடுமையான கோடைக்காலத்துப் பகல் நேரம். உச்சி வெயில். அந்த இரும்புத்தூண் மிகவும் சூடாக இருக்கும் இல்லையா? அதன்மீது சாய்ந்தபடி சில நிமிடங்கள் உங்களால் நிற்க முடியுமா? அதுவும் எப்படி? உங்களது சருமம் நேரிடையாக இரும்புத் தூணின் மீது பட வேண்டும்.

என்ன ஆகிறது? சுரீரென்று சூடு உடம்புக்குள் பரவுகிறதா?

ஒரு ஐந்து நிமிடம் கழித்து மறுபடியும் இரும்புக் கம்பத்திற்கு நெருக்கமாக நில்லுங்கள். ஆனால், உங்கள் உடம்புக்கும், சூடான இரும்புக் கம்பத்துக்கும் இடையில் ஒரே ஒரு சென்டிமீட்டர் இடைவெளி இருக்கட்டும். இப்போது சொல்லுங்கள். இரும்புக் கம்பத்தின் சூடு உங்களுக்கு உறைக்கிறதா?

இல்லையல்லவா?

அது எப்படி?

அதே சூரியன். அதே தகிப்பு. அந்த இரும்புக்கம்பமும் அப்படியேதான் இருக்கிறது. அதில் வெயிலின் சூடும் இருக்கிறது. அதன் மீது பட்டவாறு முன்பு நீங்கள் நின்றபோது அந்தச் சூட்டை உணர்ந்தீர்கள். ஆனால் இப்போது அதே சூழ்நிலைதான். ஒரே ஒரு வித்தியாசம்! அந்த இரும்புக் கம்பத்துக்கும், உங்களுக்கும் இடையில் ஒரு சின்ன இடைவெளி. பலன்? அந்தக் கம்பத்தின் சூடு, உங்களுக்கு எந்தவித பாதிப்பையும் ஏற்படுத்தவில்லை. இதே சிறிய, பக்குவமான இடைவெளியை... பற்றின்மையை... மனத்தளவிலும் கொண்டு வந்து விடுங்கள்... குடும்பம், தொழில், சமூகம், உலகம் என்ற சூழ்நிலையிலேயே இருந்தபோதிலும், அகத்தளவில் ஒரு விடுதலை உணர்வை அது ஏற்படுத்தித் தரும்.

ஆக, நாமாகவே ஒரு சங்கிலியை எடுத்து நம்மைக் கட்டிப் போட்டுக் கொண்டு, சிரமப்பட்டுக் கொண்டிருக்கிறோம். நம் இடத்திலேயே இருந்தபடி இஷ்டம் போல சுதந்திரமாக இருக்கலாம். அந்தச் சங்கிலி எதற்காக? தூக்கி எறியுங்கள்! மன அமைதி தானாக உங்களைத் தேடி வரும்!

சரி, இந்த இடைவெளியினால் அன்பு குறைந்து போய்விடாதா... உறவுகள் தேயாதா? சந்தேகம் வருகிறதல்லவா?

(வெற்றி தொடரும்)

# அஜீத்திடம் கேட்கக் கூடாத 10 கேள்விகள்!

1. பஞ்ச் டயலாக் பேசிட்டு வந்தவுடனே ப்ளட் ப்ரஷர் செக் பண்ணிக்குவீங்களா?
2. உங்க கணக்குல ஃப்ளாப் ஆன படங்கள் அதிகமா? ட்ராப் ஆன படங்கள் அதிகமா?
3. 'ஏவி.எம் ஒரே நேரத்துல ரெண்டு சூப்பர் ஸ்டார் படங்களைத் தயாரிக்கப் போகுது'ன்னு சொல்லிக்கிட்டுத் திரியறீங்களாமே! உண்மையா?
4. உங்க படத்துல வர்ற காமெடி சீனைவிட, நீங்க கொடுக்குற பேட்டியெல்லாம் செம காமெடியா இருக்கே, அது எப்படி?
5. 'காட்' ஃபாதரைக் காணும். 'நான் கடவுள்' தள்ளிப் போச்சு! அதான் 'திருப்பதி' கடவுள்கிட்ட சரணடைஞ்சுட்டீங்களா?
6. '30 நாட்களில் தொப்பையைக் குறைப்பது எப்படி'ன்னு புதுசா ஒரு பொஸ்தகம் எழுதப் போறீங்களாமே?
7. நீங்க 'அல்ட்டிமேட் ஸ்டாரா'? இல்ல 'அலட்டி'மேட் ஸ்டாரா?
8. படங்களை ஒத்துக்கறதுக்கு முன்னாடி, டைரக்டருங்ககிட்ட படத்தோட கதையைக் கேட்பீங்களா? பஞ்ச் டயலாக்கைக் கேட்பீங்களா?
9. எதிர்முகாமோட டைரக்டரை உங்க பக்கம் லவட்டறதுக்கு என்ன பண்ணுனீங்க?
10. அவரு இளைய தளபதின்னா, நீங்க இளைய 'தல'பதியா?

- பரமு

# போட்டுத் தாக்கு!

# புதிர் முடிச்சு!

நாகேந்திர பாரதி



“அப்பா”

காந்தக் குரலால் கவரப்பட்ட இமைகள் திறந்தன.

மங்கலாகத் தெரிந்தான் சுந்தர்.

‘இவனுக்கு எப்படித் தெரிந்தது?’

“அத்தை பேசினாங்க”

தங்கை மங்களத்துக்கு மானசிகமாக நன்றி சொன்னார் வெங்கட்ராகவன்.

அவரது நினைவு கொஞ்சம் பின்னோக்கி ஓடியது.

தாயில்லாத பிள்ளை என்று செல்லமாக வளர்த்தது.

அப்புறம் எப்படி திடீரென்று பேச்சை நிறுத்திக் கொண்டான்?

சிகரெட் பிடிப்பதை நிறுத்தச் சொன்ன போதா?

படிப்பு விஷயங்களில் கறாராக நடந்து கொண்டபோதா...?

புரியாத புதிர் அது.

அதன்பின் வேலைக்காக லண்டனுக்குப் போனவன்தான்.

வாரம் ஒரு ஈ-மெயில் வரும், உடல்நலம் விசாரித்து.

மாதம் ஒரு டிராஃப்ட் வரும், கணிச

## புள்ளி விவரப் புலி!

எய்ட்ஸ் நோயால் பாதிக்கப்பட்டவர்களின் எண்ணிக்கை உலகம் முழுவதும் 11.8 மில்லியன். இவர்களுள் இளம் பெண்களின் எண்ணிக்கை மட்டும் 7.3 மில்லியன். பாதிக்கப் பட்டவர்களில் மூன்றில் ஒரு பங்கு இளைஞர்களும், இளைஞிகளும் தான். சென்ற ஆண்டு மட்டும் 3.1 மில்லியன் நோயாளிகள் இந்நோயால் மரணமடைந்திருக்கிறார்கள். இந்தியாவில் முதல் எச்.ஐ.வி நோயாளி 1986இல் சென்னையில் கண்டுபிடிக்கப் பட்டார்.

மானத் தொகைக்கு.

இவர் தொலைபேசினால் ஒன்றிரண்டு வார்த்தைகளில் பதில் கிடைக்கும்.

அவனது சிறுவயது சேஷ்டைகளை நினைத்து, திருப்திப்பட்டுக் கொள்ள வேண்டியதுதான்.

பள்ளி யூனிஃபார்மில் 'டாட்டா' சொல்லி வேன் ஏறிப் போனது, பட்டம் விட்டது.

பக்கத்துப் பூங்காவில் கிரிக்கெட் விளையாடியது.

அவன் சைக்கிள் ஓட்ட, பின்னால் ஏறி டபுள்ஸ் போனது, நினைவுகளின் சுகத்தில் வாழப் பழகிப் போனார் வெங்கட்.

தொலை பேசுவதையும் நிறுத்திக் கொண்டார். அவனுக்குப் பிடிக்காத போது, ஏன் தொந்தரவு செய்ய வேண்டும்?

போன வாரம், பக்கவாதம் வந்து படுத்தபின்தான், அவனைப் பார்க்க, பேச மனது துடித்தது.

சொல்ல விரும்பவில்லை அவர். யாராவது சொல்ல மாட்டார்களா என்று மட்டும் துடித்தார்.

மங்களத்துக்குப் புரிந்திருக்கிறது.

தொடும் மகனின் கை வழியே தனக்குள் உயிர் ஓடுவதை உணர்கிறார் வெங்கட்ராகவன்.

நன்றியாகக் கண்ணீர் திரள்கிறது.

அதைத் துடைத்தபடி,அவர் அருகே அமர்கிறான் சுந்தர்.

"ரேவதி ஆன்ட்டி... நம்ம வீட்டுக்கு அடிக்கடி வருவாங்களே, போனமாசம் இறந்து போயிட்டாங்களாமே!" கையைப் பிடித்தபடி மெல்லிய குரலில் விசாரிக்கிறான். அவன் குரலில் ஏதோ ஒரு நிம்மதி கலந்த சந்தோஷம்!

அந்தப் புதிர் முடிச்சு அவருக்குள் அவிழ்கிறது.

# நோ ப்ராப்ளம்!

**ஜார்ஜ் புஷ்ஷுக்கு ஒரு பிரச்னை! நிதி அமைச்சருக்கு ஒரு பிரச்னை, இந்திய கிரிக்கெட் டீமுக்கு ஒரு பிரச்னை, எஸ்.ஜே. சூர்யாவுக்கும் ஒரு பிரச்னை! டப்பு உள்ள ஆட்களுக்கே பிரச்னை என்றால், வெத்து வேட்டு கேஸ்கள் பற்றி என்னத்த சொல்ல? குடும்பப் பிரச்னை, குழந்தைகள் பிரச்னை, பணப் பிரச்னை, காதல் பிரச்னை என வித விதமான சிக்கல்கள்! ஒரு சில சோக ஜாதகக்காரர்களுக்கோ எல்லாப் பிரச்னைகளுமே வீடு கட்டி நின்று கம்பு சுழற்றுவதும் உண்டு!**

"உங்களுக்கு எந்த மாதிரியான பிரச்னை இருந்தாலும், வாழ்க்கை முறை மனோதத்துவம் (Existential psychology) மூலம் சரி செய்ய முடியும்" என்கிறார் மனவியல் நிபுணர் வி.சண்முக சுந்தரம். சென்னை, போரூரில் 'ரைட் சொல்யூஷன்ஸ்' என்ற பெயரில் கவுன்ஸலிங் சர்வீஸஸ் நடத்தி வருகிறார்.

"பார்வதி என்றொரு பெண்மணி. அவருக்குத் தீராத தலைவலி. எவ்வளவோ வைத்தியம் செய்தும் தீரவில்லை. பார்வதியிடம் பேசியபோது, அவருடைய மகன் சண்டை போட்டுக் கொண்டு தனிக்குடித்தனம் போய்விட்டதாகச் சொன்னார்.

"எனக்குப் பேரன் பிறந்திருக்கான் ஸார். அதைக் கூட கொண்டு வந்து காட்டலை அந்த மவராசி!" என்று அழுதார். அவருக்கு பல லெவல்களில் மனோதத்துவ கவுன்ஸலிங் தரப்பட்டன.

"உணர்வுகளால் பாதிக்கப்பட்டால் நோய் வரும்... தலைவலி வரும் போதெல்லாம் மாத்திரை சாப்பிடுவதை விட, தலைவலியை உண்டாக்கும் தீய உணர்வுகளைச் சீராக்க முயற்சி செய்யுங்கள். உங்கள் மருமகளை நீங்கள் எப்படியெல்லாம் சண்டைபோட்டு காயப்படுத்தினீர்கள் என்று கற்பனை செய்து, வி.சி.ஆரில் போடுவது போல ரீ வைண்ட் செய்து பாருங்கள். அதற்காக அவளிடம் மானசீகமாக மன்னிப்புக் கேளுங்கள். உங்கள் மருமகள் செய்த தவறுகளை முழுமையாக மன்னியுங்கள். உங்கள் மனத்தில் மண்டிக் கிடக்கும் வெறுப்பைச் சுரண்டிச் சுரண்டி, நீக்குங்கள்' என்று சொல்லிச் சொல்லியே அவரது மைண்ட் செட்டை மாற்றினோம். இது தவிர, மூச்சுப் பயிற்சி, தியானம் போன்றவையும் கையாளப்பட்டன. இப்போது பார்வதிக்கு மருமகள் மீது வெறுப்பில்லை. தானே மகன் வீட்டுக்குப் போய், குழந்தையைப் பார்த்து விட்டு வந்திருக்கிறார். இவரிடம் காணப்பட்ட நல்ல அதிர்வுகள் எதிர்ப்புறமும் எதிரொலிக்க... இப்போது ராசியாகிவிட்டார்கள். பார்வதிக்கு தலைவலியும் வருவதில்லை" என்று சமீபத்தில் குணப்படுத்திய கேஸ் ஹிஸ்டரி சொன்னார்.

"குடும்பப் பிரச்னை, காதல் பிரச்னை என்று வந்தால், கவுன்ஸலிங் முறையில் ஆலோசனை தருகிறீர்கள். ஆனால் கடன் தொல்லை, பணப்பிரச்னை என்று யாராவது வந்தால் நீங்கள் என்ன செய்ய முடியும்?"

"ஏழ்மை என்பது ஒருவித மனநிலை. அதுபோல வளமான வாழ்வும் ஒரு மனநிலையே! ஏழ்மையை தன்னுடைய தலைவிதி என்று மனசுக்குள் நிர்ணயம் செய்து கொண்டவர்கள், எப்போதும் ஏழ்மையிலேயே உழல்வார்கள். பணத்தை நேசிப்பவர்களும், வசதியாக வாழ வேண்டும் என்று நிர்ணயம் செய்தவர்களும் வசதியாகவே வாழ்வார்கள். ஆனால் இத்தகைய நிர்ணயங்கள் எல்லாமே, அவர்களுடைய அறியாப் பருவத்திலேயே உருவாவதால், அப்படி ஒரு நிலைப்பாடு தங்களுக்குள்ளே இருப்பதை அறியாமலேயே வாழ்ந்து வருவார்கள். இதைத்தான் poverty is a state of mind; prosperity is also



**"ஏழ்மை என்பது ஒருவித மனநிலை; வளமான வாழ்வும் ஒரு மனநிலையே!**

a state of mind என்பார்கள்.

"உங்கள் கேள்விக்கு வருகிறேன். எங்களிடம் பணப் பிரச்னை என்று வருபவர்களிடம், முதலில் பலதரப்பட்ட விவரங்களைச் சேகரித்துக் கொள்வோம். ஒரு மனிதர்; நல்ல உழைப்பாளி, நிலையான வருமானம் உள்ளவர்... பத்து லட்ச ரூபாய் கடன் வாங்குகிறார் என்றால் அது வேறு விஷயம்! அதுவே ஒரு சோம்பேறி, வியாபார நுணுக்கம் அறியாதவர், வருமானமோ, வேலை வெட்டியோ இல்லாதவர், பத்து லட்ச ரூபாய் கடன் வாங்குகிறார் என்றால், அது தவறான செய்கை!

"நீங்கள் இப்படி கடன் தொல்லைகளால் அவதிப்படுவதே தவறான நிர்ணயங்களால்தான். யானை தின்கிறது என்பதற்காக, பூனையும் அதேபோல சாப்பிட்டால் செரிக்குமா? நீங்கள் உங்களை யானையாக நினைத்துக் கொண்டுவிட்டீர்கள். உண்மையில் நீங்கள் ஒரு பூனைதான். உங்கள் தகுதியை அதிகமாகக் கற்பனை செய்து கொண்டு விட்டீர்கள்" என்று எடுத்துச் சொல்லி புரியவைப்போம். உங்களுக்கு விளக்குவதற்காக இப்படி ஒரு பாராவில் சொல்லிவிட்டேனே தவிர, அதிலும் நிறைய ஆழ்மன சூத்திரங்களும், மனோ ரீதியான நுட்பங்களும் உள்ளன. தான் ஒரு பூனைதான் என்று அவர் உணர்ந்து விட்டால், அவருடைய பிரச்னையிலிருந்து வெளியே வந்து விடலாம். பூனைதான் என்று சொல்லிப் புரிய வைப்பது ஒரு நிலை. அவரையே சூப்பர் பூனையாக ஆக்குவது அடுத்த நிலை."



"சரி, பிரச்னைகளே இல்லாமல் வாழ என்ன செய்ய வேண்டும்?"

"ஸாரி... பிரச்னைகளே இல்லாத மனிதன் என்பவன், நிழலே விழாத மனுஷனைப் போல தான். ஒவ்வொரு மனிதனும் அவனது மனத்தால் ஆளப்படுகிறான். ஒருவனது வாழ்வில் குழந்தைப் பருவத்தில் ஏற்படும் அனுபவங்களே, எண்ணங்களாக, நிர்ணயங்களாக, அவனது மனத்தை ஆக்ரமிக்கின்றன. எனவே, குழந்தைகளை வளர்க்கும்போது, நல்ல பண்புகளுடன் வளர்க்க வேண்டும். மன ஆரோக்கியமும், உடல் வளமும் உள்ள ஒழுக்கமான குழந்தை, எதிர்காலத்தில் பிரச்னைக்குரிய மனிதனாக இருக்க மாட்டான். கடுமையான உழைப்பு இருந்தும் ஒரு சிலர் தோற்கிறார்கள் என்றால், அவருடைய அணுகுமுறையில் ஏதோ குறை என்று அர்த்தம். பாஸிடிவ்வான மைண்ட் செட் உள்ளவர்கள்தான், எதிலும் எப்போதும் ஜெயிக்கிறார்கள். இதைப் புரிந்து கொண்டு விட்டாலே, பிரச்னைகள் எல்லாம் பஞ்சு போலாகிவிடும்."

• வி. சண்முக சுந்தரம்



- டாலி




# க்யூபாவின்

அநியாயத்திற்குச் சுழற்றி அடித்த காத்ரினா, மூன்றாவது சுற்றுக்குப் பிறகு சுழற்றி அடிக்காத சானியா போன்ற சோகங்களை கடந்து, லண்டனுக்குள் பிரவேசித்தால், ஓர் ஆச்சரியமான செய்தி காத்துக் கொண்டிருக்கிறது.

பெயர் ஹூக் சாயர். ஆக்ஸ்ஃபோர்டு பல்கலைக்கழகத்தில் சட்டம் பயின்றவர். வயது 32. கைநிறையச் சம்பாதிக்கிறார். ஒரு கேர்ள்பிரண்ட் உண்டு. ஆனால் என்னவோ தெரியவில்லை 'நான் காட்டில் தான் வசிப்பேன்' என்று முரட்டுப் பிடிவாதம் பிடித்து, தம்மை தாமே நாடு கடத்திக் கொண்டு வனவாசம் செய்து வருகிறார். 'டெக்னாலஜி வாசனையே இல்லாமல் ஒரு மனிதனால் வாழ முடியும் என்று நிரூபிக்கப் போகிறேன்' என்கிறார் சாயர்.

காலை ஒன்பது மணிக்கு எழுந்து எல்லோரையும் போலத்தான் அலுவலகம் செல்கிறார் (பல் தேய்ப்பாரா என்று தெரியவில்லை) கடிகாரம் ஐந்து முறை அடித்ததும் நேராகக் கிளம்பி ஆகஸ்போர்ட்ஷையர் பகுதியில் உள்ள காட்டுக்கு, (அதாவது வீட்டுக்கு) அவசர அவசரமாகத் திரும்பி விடுகிறார். டீவி., தரை விரிப்பு, மின்சாரம், ஃப்ரிட்ஜ், ஏசி, நாற்காலி, மேஜை, கொசுவத்திச் சுருள் எதுவுமே கிடையாது. தலைக்கு மேலே தார்பாலின் கூரை, மாற்றுத் துணிமணிகள், ஒரு குட்டி ஸ்டவ். அவ்வளவுதான்.

எப்படி இருக்கிறதாம் வாழ்க்கை? 'மிக நன்றாக!' என்கிறார்- ஒரு கசப்பான அனுபவம் நீங்கலாக. இவர் பையில் ஏதாவது தேறுமா என்று பார்ப்பதற்காக ஒரு கும்பல் இவரை ஒரு முறை அடித்துப் போட்டு விட்டுப் போயிருக்கிறது. ('உனக்கெல்லாம் பை ஒரு கேடா?') மற்றபடி எந்தப் பிரச்னையும் கிடையாதாம்.

"என் ஃப்ரெண்ட்ஸ் எல்லாம் சாயர் 'ஒரு மாதிரி'ன்னு சொல்றாங்க, ஆனா எனக்கு அவரை நினைச்சா ரொம்பப் பெருமையா இருக்கு" என்கிறார் சாயரின் கேர்ள் ப்ரெண்ட் நதாலி.

கொஸ்டியன் ஆப் தி வீக் - உங்கள் கேர்ள் ப்ரெண்ட் உங்களை நினைத்துப் பெருமைப்பட வேண்டுமானால், நீங்கள் என்ன செய்ய வேண்டும்? ஆப்ஷன்ஸ் கிடையாது. கடைசிப் பாராவை பார்க்க வேண்டாம். நிச்சயமாக க்ளூ இருக்காது!



## உலகம் இவ்வளவுதான்

சாயரைத் தவறாக நினைக்க வேண்டிய அவசியம் கிடையாது. நதாலி சொல்லியதைப் போல இது பெருமைப்பட வேண்டிய விஷயம் தான். ஏனென்றால் 25 மில்லியன் வருடங்களுக்கு முன்னால் வாழ்ந்த ரீசஸ் (Rhesus) வகை குரங்கினத்தின் க்ரோமோஸோம்கள், இன்றளவும் நம்மிடையே எக்கச்சக்கமாக ஒட்டிக் கொண்டிருக்கின்றன என்று கண்டுபிடித்

திருக்கிறார்கள்.

ஒரு கையில் குரங்கின் DNA வரைபடத்தையும், மறுகையில் மனிதனின் DNA வரைபடத்தையும் வைத்துக் கொண்டு கண்களில் விளக்கெண்ணெயை ஊற்றி ஒப்பிட்டுப் பார்த்த நேஷனல் கேன்ஸர் இன்ஸ்டிடியூட் ஆராய்ச்சியாளர்கள், (வேறு எங்கே? அமெரிக்காவில் தான்)




# க்ரோமோஸோம்!

இரண்டிலும் கிட்டத்தட்ட ஐம்பது சதவிகித க்ரோமோஸோம்கள் அச்சு அசல் ஒன்று போலவே இருப்பதைக் கண்டு ஆச்சரியமடைந்திருக்கிறார்கள். அதுவும் அதே வரிசையில், அதே ஒழுங்கில் அவை அமைந்திருக்கின்றன- எல்.கே.ஜி குழந்தைகள் ப்ரேயர் முடிந்து வகுப்புக்குச் செல்வதைப் போல.

எஞ்சியுள்ள க்ரோமோஸோம்கள் மட்டும் வரிசை மாறி அங்கொன்றும் இங்கொன்றுமாக, பெல் அடித்ததும் வீட்டுக்குச் செல்லும் குழந்தைகளைப் போல் கலைந்து போய்க் கிடக்கின்றன. 25 மில்லியன் வருடங்கள் ஆயிற்றே! காணாமலே போயிருக்க வேண்டும். கலைந்து தான் போயிருக்கிறது. அதனால் என்ன? சீட்டுக் கட்டு அடுக்குவது போல அந்த க்ரோமோஸோம்களின் காதைப் பிடித்துத் திருகி, ஒழுங்குபடுத்தி, கான்ஸர் போன்ற நோய்களுக்கும், காது இருகப்பட்ட க்ரோமோஸோம்களுக்கும் இடையே உள்ள தொடர்பை ஆராய்ந்து வருகிறார்கள். இனி அடுத்தடுத்து க்ரோமோஸோம்களைப் பற்றி நிறையத் தகவல்கள் வெளிவரும்.

அமெரிக்காவுக்கு அடுத்த பாராவிலேயே க்யூபாவைப் பற்றி எழுதினால், அதுவும் அவர்களது முன்னேற்றத்தைப் பற்றி எழுதினால், அமெரிக்காவின் தலைமுடி விறைத்துக் கொள்ளும் என்பதால் க்யூபா பற்றிய ஒரு குட்டிச் செய்தி. இந்த வருட இறுதிக்குள் 150,000 புதிய வீடுகளைக் கட்டித் தருவதாக க்யூபா உறுதியளித்துள்ளது. இதில் 6000 வீடுகள் க்யூபா மருத்துவர்களுக்காக, (நன்றி- புன்னி விவரப் புலி). எவ்வளவு காசு போட்டுக் கட்டுகிறார்களோ அவ்வளவு மட்டுமே வசூலிக்கப்படும். நயா பைசா மேலே கேட்க மாட்டார்கள்.

இது தவிர, சொந்த வீடு வாங்க இயலாதவர்களின் வீட்டு வாடகையை பாதாளம் அளவுக்கு குறைக்கப் போகிறார்கள். க்யூபர்கள் கரை வேட்டி கட்டுவதில்லை என்பதால் அங்கு சரண்டல்களுக்கு வழி கிடையாது. இப்படியெல்லாம் செய்தால் அமெரிக்காவுக்குப் பிடிக்காது என்று நன்றாகத் தெரிந்திருந்தும் விடாப்பிடியாக முன்னேறிக் கொண்டிருக்கிறது க்யூபா.

நாம் கூட ஒன்று செய்யலாம். க்யூபா அரசியல்வாதிகளின் க்ரோமோஸோம்களையும், நமது 'தலை'களின் க்ரோமோஸோம்களையும் கவனமாக ஒப்பிட்டு, எங்காவது ஒரு குட்டிப் பொருத்தமாவது தப்பித் தவறி இருக்கிறதா என்று தேடிப் பார்க்கலாம்.

முந்தைய கேள்விக்கு இன்னமும் விடை தேடிக் கொண்டிருப்பவர்களுக்கு விடை:- தார்பாவின் டென்ட் அடிக்க வேண்டும்.

- மருதன்

# நேர்த்தி 8

கனிமொழி

புழுதி படிந்த தலை
பறக்கும் வாகனங்கள்
உமிழும் புகைமண்டிய
குளித்தறியா உடல்.
பச்சை விளக்கு
வேண்டி நிற்கும்
வாகனங்களின்
ஜன்னல் விளிம்பைத்
தொடும் விழிகள்.

சிறிய கைகளால்
இடையில் துவளும்
குழந்தைக்குப் பால்
கேட்டு யாசிப்பாய்.

ஆடி மாதத்தில்
மஞ்சள் உடுத்தி
சாமிக்கு நேர்த்திக்
கடன் என்பாய்
வேறு ஒரு சந்திப்பில்
ஊமையாய் நடித்தாய்.

சில சமயங்களில்
அழுக்கும் பிசுக்குமான
துணி எடுத்து
கார் கண்ணாடி
துடைப்பாய்.

பச்சை முடிந்து
சிவப்பு வர
நீளும் நாட்கள்.

யார் தடுத்தாலும்
ஒற்றை ரூபாயை
காணிக்கையாய்
வழங்காமல் போனதில்லை.

அதில் தான் இருக்கிறது
இரைஞ்சும் உன் கண்களை
மறந்து மெத்தென்ற
அணைப்பில் என்
பிள்ளையோடு நான்,
உறங்கும் சூட்சுமம்.

ஓவியம்: மருது

கல்கி 25.9.2005

# வேத வார்த்தைகள்!

ஒருபுறம் உலகளந்த பெருமாள் கோயில். இன்னொருபுறம் வீரட்டானேஸ்வரர் கோயில். வைணவ - சைவ திருத்தலம். நூற்றியெட்டு திவ்ய தேசங்களில் ஒன்று. நாலாயிர திவ்ய பிரபந்தத்தின் முதல் பாடல்கள் பாடப் பெற்ற தலம். பதினொரு நிலை கொண்ட பெரிய கோபுரம், நூற்றுத் தொண்ணூற்று நான்கு அடி உயரத்தில் கம்பீரமாய் எழுந்து நிற்கிறது. பெருமாள் திரு விக்ரமனாக, உலகளந்த பெருமாளாக அருள் பாலித்து வருகின்றார். அந்த அருள் கடாட்சத்தை அணுவளவேனும் பெற்றெய்தி, கோபுரக் கூடுகளிலிருந்து பறந்து செல்லும் புறாக்களைப் போல நாமும் பறந்து சென்றோம் திருக்கோவிலூர் வீதிகளில் கல்கி வாசகர் என்.ஆர்.வெங்கட்ராமனைப் பார்க்க...

பத்துக்குப் பத்து அறை. அதில் இரண்டு டைப்ரைட்டிங் மிஷின்கள். ஒன்று தமிழ், இன்னொன்று ஆங்கிலம். ஒரு மர பெஞ்ச். இதுதான் ஸ்ரீதர் ஜாப் டைப்பிங் சென்டர். அதனை பதினைந்து ஆண்டுகளாக வைத்து நடத்தி வரும் வெங்கட்ராமன், இருபத்தைந்து வருட கல்கி வாசகர். அவரது அப்பா என்.எஸ். ராமமூர்த்தி அய்யர், விவசாயத் துறையில் மேலாளராகப் பணிபுரிந்தவர். வெங்கட்ராமனுக்கு ஒரு அக்கா, இரண்டு தம்பிகள், ஒரு தங்கை. அப்பா காலமாகி விட்டார். அதன் பின்னர் ஒட்டு மொத்த குடும்பச் சுமையும் வெங்கட்ராமன் மீதுதான். மலைக்கவில்லை, சளைக்கவில்லை. அம்மாவுக்கு வரும் இரண்டாயிரம் ரூபாய் பென்ஷன், டைப்பிங் சென்டர் வருவாய், இவற்றைக் கொண்டே ஜீவிதம். கடைசித் தம்பி சங்கரைத் தவிர ஏனைய நால்வருக்கும் திருமணம் ஆகிவிட்டது.

"மாதம் ஆறாயிரம் ரூபாய் ஈட்டிக் கொள்ள முடியும் டைப்பிங் சென்டரில்" என்கிறார் வெங்கட்ராமன். கடைக்கு எண்ணூறு ரூபாய் மாத வாடகை. "நடுத்தர வருவாய். எளிய வாழ்க்கை. ஆத்மார்த்த இல்லறம். வாழ்க்கை இனிது இனிது'' என்று உள்ளம் பொங்கிடக் கூறுகிறார்.

வீட்டுக்குள் செல்கிறோம். இரண்டு வயதுப் பெண் குழந்தை ரம்யா ஓடி வந்து,



"யார் இந்தப் புது நபர்?" என்கிற தினுசில் நம்மை ஏறிட்டுப் பார்த்தது.

"திருக்கோவிலூர் சன்னதி வீதியில் அப்போது நாங்கள் குடி இருந்தோம். நான்தான் வீட்டுக்கு மூத்தவன். எனக்குப் பிறகு இரண்டு தம்பிகள். அப்பா, ஹோட்டல் ஒன்று வைத்து நடத்தி வந்தார். சுமாரான வருமானம்தான். என்னை எப்படிக் கரை சேர்ப்பது என்று தவித்துப் போனார். அப்போது வந்த வரன்களில் இவர் ரொம்பவே வித்தியாசமாக இருந்தார். எனக்

கும், என் அப்பாவுக்கும் மிகவும் பிடித்துப் போயிற்று. அப்புறம் என்ன? பேச்சுவார்த்தை துவங்கிய ஒரு மாதத்திற்குள், கல்யாணமே நடந்து முடிந்து விட்டது!'' எனச் சொல்லி புன்னகை செய்கிறார் புஷ்பவள்ளி வெங்கட்ராமன்.

''முறைப்படி மூன்று நாள் கல்யாணமே நடத்திக் கொடுத்து



விடுகிறேன் என்று எங்களிடம் கூறினார் என் மாமனார். அதெல்லாம் வேண்டாம். ஒரு நாள் கல்யாணமே போதும் எனக் கூறிவிட்டேன் நான். வரதட்சணை எதுவும் தரக் கூடாது என்றும் கண்டிப்புடன் சொல்லி விட்டேன். அந்த ஒரு நாள் திருமணத்தின் போதும், அன்று மாலையே கட்டுசாதக் கூடை நிகழ்ச்சியினையும் நடத்தித் தந்துவிட்டனர். பொதுவாக கட்டுசாதக் கூடை என்பது கல்யாணம் ஆன மறுநாள் நடத்துவது. இதனை நாங்கள் எதிர்பார்க்கவே இல்லை!'' என்றார்.

'பிறந்தகத்துலேருந்து புக்ககத்துக்கு சகல சௌந்தர்யங்களும் நிறைஞ்ச ஒரு பொண்ணே தட்சணையாக வரும்போது, மத்ததெல்லாம் எம்மாத்திரம்? அவளே ஒரு சிறந்த வரதட்சணைன்னு நான் ஏத்துக்கிட்டேன்'' என்கிறார் வெங்கட்ராமனின் தாயார் பத்மா. இவரும் 'கல்கி'யின் நாற்பதாண்டுகால வாசகி.

''என்னோட கல்யாணம் மட்டுமில்லே. என்னோட தம்பி கல்யாணத்துலயும் வரதட்சணை வாங்காம நடத்தி முடிச்சேன். பெண்ணுக்குத் துணிமணிகள், திருமாங்கல்யம், வேன் செலவு உள்பட எல்லாத்தையும் நாங்களே மனநிறைவோட ஏத்துக்கிட்டோம்.''

கல்கியில் பிரசுரமாகும் மகா பெரியவாளின் அருள்வாக்குதான் இத்தனைக்கும் காரணம்'' என்கிறார் அவர்.



**க**ல்கியில் பிடித்தது: ஆர்.பத்மாவுக்கு அருள்வாக்கு, வெற்றி உங்கள் சாய்ஸ். வெங்கட்ராமனுக்கு தலையங்கம், புஷ்பவள்ளிக்கு சிறுகதைகள், ஜோதிடம்.

- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

# வாரம் ஒரு வாசகர் குடும்பம்

# நூறு சதவிகிதம் இலவசம்!

இன்ஃபோஸிஸ் ஃபவுண்டேஷனின் தலைவி என்ற முறையில் எனக்கு நூற்றுக்கணக்கான கடிதங்கள், உதவி கோரி வந்துகொண்டே இருக்கும். கல்வி, வீடு கட்ட, மகளின் திருமணம், மருத்துவச் செலவு என்று இவை இருக்கும். ஆனால் இந்த அறக்கட்டளையில், உண்மையான செலவுக்கு மட்டுமே, ஆதாரங்களுடன் விண்ணப்பித்தால், 60 முதல் 80 சதவிகித உதவி செய்வது வழக்கம்.

ஒருதடவை, ஓர் இளைஞனின் கடிதம் என் பார்வைக்கு வந்தது. "உங்கள் மனசு கல் மாதிரி. நீங்கள் நூறு சதவிகிதம் உதவுவதே இல்லை" என்று அதில் குறிப்பிட்டிருந்தான்.

அப்படி நூறு சதவிகித உதவி கொடுப்பதற்கில்லை என்ற முடிவை, என் அனுபவத்தில்தான் நான் எடுத்திருந்தேன். முழுவதையும் கொடுத்து விட்டால், பெற்றுக் கொள்பவரின் முயற்சி என்பதே துளியும் இல்லாமல் போய், உதவியின் முக்கியத்துவம் புரிந்து கொள்ளப்படாமல் போய்விடும். வாழ்க்கையில் நூறு சதவிகிதம் யாருக்கும் கொடுக்காதீர்கள். இலவசம் என்னும்போது, மக்கள் அதை மதிப்பதில்லை. உங்கள் குழந்தைகள், நண்பர்கள், உங்களோடு பணிபுரிந்தவர்கள் - யாராகவும் இருக்கட்டும்; இதுதான் உண்மை.

சில வருடங்களுக்கு முன், எங்கள் அலுவலகத்தின் எதிரே, போக்குவரத்துச் சந்திப்பில், ஒரு பையனைக் கவனித்துக்கொண்டே இருந்தேன். பையனுக்கு 14 - 15 வயது இருக்கலாம். ஒல்லியாக இருப்பான். துடைக்கிற துண்டு விற்பான். எனக்கு நேரம் கிடைக்கிறபோதெல்லாம் ஜன்னல் வழியே பார்ப்பேன். அதே சந்திப்பில், அழகாக உடையணிந்து, ஸ்கூல் பைகளை வைத்துக்கொண்டு, சிறுவர்கள் அமர்ந்திருக்கும் பள்ளிக்கூட பஸ்ஸையும் பார்ப்பேன். அந்தப் பையனை என் அலுவலகத்துக்கு அழைத்தேன். இப்படி ஒரு நிறுவனத்துக்கு வருவது அவனுக்கு முதல் தடவை போலும். சற்றே பயந்து போயிருந்தான். அவனால் சாதாரணமாக, இயல்பாக இருக்க முடியவில்லை. அந்த நிலையைப் போக்க, அவனை உட்காரச் சொல்லி, நிறைய பிஸ்கட்டுகளும், ஒரு கப் காபியும் கொடுத்தேன். முதலில் தயங்கினான். பிறகு நான் வற்புறுத்திச் சொல்லவே, மெதுவாகச் சாப்பிட்டான். பிறகு என்னோடு பேசத் தொடங்கினான். அப்புறம்தான் அவனிடமிருந்து தகவல்களைத் தெரிந்துகொண்டேன்.

அந்தப் பையன் பெயர் ரவி. அவன் தகப்பனார் ஒரு கூலித் தொழிலாளி. அம்மா வீட்டு வேலைகள் செய்து வந்தாள். உள்ளூர்ப் பள்ளிக்கூடம்

உள்ளங்கையில் உலகம்

"அங்கே சிவப்பாக, தடித்த புத்தகம் ஒன்று இருக்கும். அதிலிருந்து ஒரு பக்கத்தைச் சட்டென்று கிழித்து எடுத்துக் கொண்டு வா"

ஒன்றில் படித்துக்கொண்டிருந்தான். காலை நேரத்தில் கார் துடைக்கும் துணியை விற்று, தன் படிப்புக்கு ஆகிற செலவைக் கவனித்துக் கொண்டான்.



அவனுடைய மாத வருமானம் எவ்வளவு என்று கேட்டேன். மெதுவாக,

"சுமார் 30-40 ரூபாய் அம்மா!" என்றான்.

"உன்னுடைய வகுப்புத் தேர்வு கார்டைப் பார்க்கலாமா?"

மறுநாளே அந்தச் சிறுவன் 'பிராக்ரஸ் கார்'டை எடுத்துக்கொண்டு வந்து காண்பித்தான். நன்றாகவே இருந்தன அவன் மதிப்பெண்கள்.

நான் அந்தப் பள்ளிக்கூட பஸ்ஸில் செல்லும் மாணவர்களை நினைத்துப் பார்த்தேன். அவனிடம், "ரவி, உனக்கு மாதம் ஐம்பது ரூபாய் நான் தருகிறேன். நீ இப்படி சாலையில் துணி விற்க வேண்டாம். மாதம் நாற்பது ரூபாய்க்காகச் செலவிடும் இந்த நேரத்தை, நீ வீட்டுப் பாடங்கள் செய்யவோ, பாடம் படிக்கவோ பயன்படுத்திக் கொள்ளலாம்!" என்றேன்.

அவனுக்கு முதலில் புரியவில்லை.

"எனக்கே எல்லாத் துணியையும் மாதா மாதம் விற்பதாக நினைத்துக் கொள். அதற்காக நான் உனக்கு ஐம்பது ரூபாய் தருகிறேன். நன்றாகப் படி. உன் 'பிராக்ரஸ் கார்'டை மூன்று மாதங்களுக்கு ஒருமுறை கொண்டு வந்து காண்பி!"

அவன் புரிந்து கொண்டதன் அடையாளமாக, மகிழ்ச்சி தெரிவித்தான். மிகுந்த சந்தோஷத்தோடு

''தளபதி! இப்படை தோற்கின் எப்படை வெல்லும்?''
''இதிலென்ன சந்தேகம்? எதிரிப் படைதான் மன்னா!''
- லீலாஜி

வெளியேறினான்.

இதற்குப் பிறகு ரவி ஒவ்வொரு மாதமும் அலுவலகத்துக்கு வந்து, என் செயலரிடம் பிராக்ரஸ் கார்டைக் காண்பிப்பான். ஐம்பது ரூபாயையும் அவரிடமிருந்து வாங்கிக் கொண்டு போவான். நான் பிஸியாக இருப்பதால் இந்த ஏற்பாடு.

மாதங்கள் செல்ல, ரவி இப்போது வளர்ந்துவிட்டான். ஒருநாள் என் செயலரிடம் என்னைப் பார்க்க வேண்டும் என்று சொல்லியிருக்கிறான். அவன் முகத்திலிருந்த மகிழ்ச்சியையும், தன்னம்பிக்கையையும் காணச் சந்தோஷப்பட்டேன். படிப்பைப் பற்றி விசாரித்தேன். தயக்கம் சிறிதும் இல்லாமல், ''அம்மா, எனக்குத் தரும் உதவித் தொகையை நீங்கள் அதிகரிக்க வேண்டும்!'' என்றான்.

''ஏன்? எதற்காக?''

''அம்மா, முன்பு துணி விலை இரண்டு ரூபாயாக இருந்தது. இப்போது நான்கு ரூபாயாக ஆகிவிட்டது. அதனால் நீங்கள் எனக்கு நூறு ரூபாய் மாதா மாதம் தர வேண்டும்.''

வியப்புடன் அவனைப் பார்த்தேன்.

எனக்கு அட்லஸ் என்றால் மிகவும் பிடிக்கும். நான் கிராமத்துப் பள்ளியில் படிக்கிறபோது கிடைப்பதே கஷ்டமாக இருந்தது. நான் வளர்ந்ததும், பள்ளிகளுக்கு இலவசமாக அட்லஸ் கொடுக்க ஆரம்பித்தேன். அது கர்நாடக மாநிலம், இந்தியா, உலக வரைபடங்கள் கொண்டது. அறிந்து கொள்ள வேண்டும் என்ற தாகமுடைய குழந்தைகள் அதைக் கண்டு மகிழ்வார்கள். பிறகு பல ஆசிரியர்கள் என் அலுவலகத்துக்கே வந்து அட்லஸ் வாங்கிக் கொண்டு போகத் தொடங்கினார்கள். முற்றிலும் இலவசமாகவே அவற்றைக் கொடுத்து வந்தேன்.. ஒவ்வொரு தடவையும் இந்த வரைபடங்களை மொத்தமாக வாங்கும் போதும் எனக்கு மட்டற்ற மகிழ்ச்சியாக இருக்கும்.

ஒரு தடவை நான் கிராமப்புறம் ஒன்றில் பயணம் செய்து கொண்டிருந்தேன். மாலை நேரம். மாடுகள் புல் மேய்ந்துவிட்டுத் திரும்பிக் கொண்டிருந்தன. ஒரு கிராமப்பள்ளிக் கூடத்தின் முன்னால், வேர்க்கடலை விற்றுக்கொண்டிருந்தான் ஒருவன். அப்போதுதான் பறித்த புத்தம் புதிய வேர்க்கடலை. அதன் மண் மணமே அலாதியாக இருந்தது. இன்னும் உலரவில்லை. அதன் புனிதமான மணம் என் நாசியைத் தொடவே, ஒருகிலோ வேர்க்கடலை வாங்க எண்ணினேன்.

கிராமப்புறங்களில் இது மாதிரி விவசாயிகள் தங்கள் விளைபொருள்களைக் கடைகளில் போய் விற்காமல், சாலை ஓரங்களிலேயே கடைபோட்டு, நேரடியாக மக்களுக்கு விற்று வந்தனர்.

ஒரு கிலோ எடை போட்டு, ''இந்தாருங்கள். உங்கள் பையில் போட்டுக்கொண்டு, பணத்தைக் கொடுங்கள்!'' என்றான் அவன்.

என்னிடம் பை ஏதும் இருக்கவில்லை. ''நீயோ பொருளை விற்பவன். நீதான் ஒரு பையில் இதைப் போட்டு என்னிடம் தர வேண்டும்!'' என்றேன்.

கணக்குப் பரீட்சை என்றால் பலருக்கும் பாகற்காய். ஆனால் கோவையைச் சேர்ந்த ரேணுகாவுக்கு சர்க்கரைப் பொங்கல் மாதிரி! ''கொண்டா... கொண்டா'' என்பார். 'ஸ்ரீனிவாஸ ராமானுஜன் அகாதமி ஆஃப் மேத்ஸ் டேலண்ட்' எனப்படும் சென்னை அமைப்பால் வழங்கப்படும் 'கணித மேதை ராமானுஜன் விருது' இவ்வருடம் ரேணுகாவுக்கு வழங்கப்பட்டிருக்கிறது.



# சர்க்கரைப் பொங்கல் சிறுமி!

கணக்குப்புலியான இச்சிறுமி எழுத்தாளியும்கூட. இவ்விளம் வயதில் '2010 - முன்னேற்றத் தமிழகத்தைக் காண்போம்' 'Musing of a student', 'பொது அறிவு', என மூன்று புத்தகங்களை எழுதி முடித்திருக்கிறார்.

பள்ளியில் எடுத்த மதிப்பெண்களின் அடிப்படையில், ராமானுஜன் விருது இவருக்கு வழங்கப்பட்டிருக்கிறது.

''எந்தக் கணக்காக இருந்தாலும் நல்லா வொர்க் - அவுட் பண்ணிப் பார்க்கணும். ஃபார்முலாவின் அடிப்படையைப் புரிஞ்சுக்கிட்டா, கண்ணை மூடிக்கிட்டு கணக்குல நூறு மதிப்பெண் வாங்கிடலாம்' என்கிறார் ரேணுகா.

- செந்தில்

அவர்களிடம் பிளாஸ்டிக் பை ஏதும் இல்லை. அவன் தன் உதவியாளனைப் பார்த்தான். "உடனே ஓடிப் போ, அந்தப் பள்ளிக்கூடத்துக்கு. வகுப்புகள் நடக்கின்றன. அறைகள் எல்லாம் திறந்தே இருக்கின்றன. அங்கே சிவப்பாக, தடித்த புத்தகம் ஒன்று இருக்கும். அதிலிருந்து ஒரு பக்கத்தைச் சட்டென்று கிழித்து எடுத்துக் கொண்டு வா. ஓடு'' என்று விரட்டினான்.

சில நொடிகளில் அந்தப் பையன் திரும்பி வந்தான். ஒரு புத்தகத்திலிருந்து ஒரு பக்கத்தை கிழித்துக் கொண்டு வரச் சொன்னது எனக்கு மிகுந்த வருத்தம் தந்தது. தர்மசங்கடமாக உணர்ந்தேன்.

வேர்க்கடலைப் பொட்டலத்தை என்னிடம் நீட்டினான். அதிர்ச்சியுடன் அதைப் பார்த்தேன். வரைபடம் உள்ள காகிதம்! ''எதற்கு அட்லஸிலிருந்து கிழித்து எடுத்து வந்தாய்?" என்று வேர்க்கடலைக்காரனிடம் கேட்டேன்.

''ஒரு பெண்மணி எங்கள் கிராமப் பள்ளிக்கூடங்களுக்கு இந்தப் புத்தகத்தை இலவசமாகக் கொடுக்கிறாளாம். இந்தக் காகிதத்தைப் பார்த்தீர்களா, எத்தனை தடியாக இருக்கிறது? சாதாரணமாக இப்படிக் கிழிப்பதில்லை. தேவையானபோது மட்டும்தான் கிழித்து எடுக்கிறோம்!" என்றான்.

அந்த மங்கிய வெளிச்சத்திலும்கூட, அந்தக் காகிதத்தில், 'சுதாமூர்த்தியின் அன்பளிப்பு' என்ற வாசகத்தை என்னால் படிக்க முடிந்தது!

(பேசுவோம்)

# ரா...ரா...ரா..! நயன்தாரா!

**'ரா**... ரா... ரா... சரஸக்கு ரா' என்று உள்ளங்கையைத் தரையில் வைத்து கவிழ்ந்தபடி ஜோதிகா வீறிட்டது நிழல். நிஜத்தில் 'ரா... ரா... ரா... நயன்தாரா' என்றுதான் கோலிவுட், புதுப்பாட்டு பாடிக் கொண்டிருக்கிறது.

சரத்குமாரின் நூறாவது படமான 'தலைமகன்'னின் ஜில் கதாநாயகி நயன்தாரா. கமலின் அடுத்தப்பட விவாதத்தில் இவர் பெயர்தான் அடிபட்டுக் கொண்டிருக்கிறது. சிம்பு, ஜீவா, எஸ்.ஜே.சூர்யா போன்ற இளவட்டங்களுடன் குத்தாட்டம் போடவும் முடிகிறது. என்ன சொக்குப்பொடியோ, மாய மந்திரமோ, தமிழ் சினிமா இன்று நயன்தாரா கையில். (இதை யாராவது மொழிபெயர்த்துச் சொன்னால் அஸின் காதுகளில் நிச்சயம் புகை வரும்.)

'சந்திரமுகி'யில் கோடிக்கணக்கான இதயங்களை அள்ளியாச்சு. முப்பது லட்ச ரூபாய் சம்பளத்தை எட்டியாச்சு. கோலிவுட்டில் பெருந் தலைகளெல்லாம் நயன்தாராவின் கால்ஷீட்டைத்தான் விசாரித்துக் கொண்டிருக்கிறார்கள். பாரப்பா!

'என்னய்யா, நடுப்பக்கத்தில் ஒரே நயன்தாரா புராணமாக இருக்கிறதே' என்று சலித்துக் கொள்பவர்களுக்கு அடுத்த சில வரிகள் ஒத்தடம் தரும்.

'பார்த்தும்மா... சுற்றளவு பெருத்துக்கிட்டே போகுது' என்று அட்வைஸ் தூறல்கள் மும்பை மழை மாதிரி நாள் முழுவதும் விழுகிறதாம். "இட்ஸ் ஓ.கே. நான் பார்த்துக்கறேன்" என்று பச்சரிசிப் பற்களைக் காட்டிச் சிரிக்கிறார் ந.ரா!

- பப்பி

ஒருநாள் நான் மெரீனா 'பாண்டு ஸ்டாண்டு'க்கு பக்கத்தில் போட்டிருக்கும் பெஞ்சுகளில் ஒன்றில் உட்கார்ந்தேன். எனது அடுத்த வீட்டு பஞ்சநத முதலியார், கையில் திருவாசகப் புத்தகத்துடன் அங்கு வந்தார். 'நமஸ்காரம்' என்று சொல்லிக் கும்பிட்டேன். அவரும் கும்பிட்டு விட்டு என் பக்கத்தில் உட்கார்ந்தார். இதற்குள் தூரத்தில் ஸ்ரீமான் வாதபுரீசய்யர் தன்னந் தனியாக வருவதைப் பார்த்தேன். எனக்குக் கதிகலங்கிப் போயிற்று. என்னைப் பாராமல் அவர் நெடுகப் போய் விடக் கூடாதா என்று எண்ணினேன். ஆனால் துரதிர்ஷ்டம் விடுமா? என்னை அவர் பார்த்தே விட்டார்! நான் பயந்தது போலவே என்னை நோக்கி வந்தார். சாதாரணமாய், இத்தகைய நெருக்கடியான சமயங்களில்தான் என்னுடைய மூளை மிக நன்றாய் வேலை செய்வது வழக்கம். அவரை நான் பார்த்ததாகக் காட்டிக் கொள்ளவில்லை. சட்டென்று எழுந்திருந்தேன். பக்கத்திலிருந்த செடிகளின் வழியாகப் புகுந்து, பெரிய ரோட்டைச் சேர்ந்தாற்போல் கடலில் உட்புறமாய்ச் செல்லும் கால்நடைப்பாதை வழியாக அவசரமாக நடக்கத் தொடங்கினேன்.

சுமார் ஒரு பர்லாங் தூரம் போனதும் ஒரு ஞாபகம் வந்தது. வந்த வழியாகவே திரும்பிப் போனேன். ஐயரும் முதலியாரும் உட்கார்ந்திருந்த பெஞ்சுக்குப் பின்புறமாகப் போனபோது, ஐயர் இன்னும் திருவாசகத்தின் பெருமையிலேயேயிருந்தார். மறுபடி திரும்பி அந்தப் பக்கம் வந்தபோது தற்காலத்து டெலிவிஷன் சாதனங்களையும், முற்காலத்து ரிஷிகளின் ஞானதிருஷ்டியையும் ஐயர் ஒப்பிட்டுக் காட்டிக் கொண்டிருந்தார். இம்மாதிரியே, மாலை ஆறு மணிவரையில் அங்கேயே குறுக்கும் நெடுக்கும் போய்க் கொண்டிருந்தேன். வர்ணாசிரம தர்மம் ஆதியில் ஏற்பட்ட தன் தத்துவம், அது இப்போது சீர்கெட்டிருக்கும் நிலை, நாணயமாற்று விகிதத்திலுள்ள பித்தலாட்டம், அல்லோபதியை விட ஆயுர்வேதம் சிறந்ததென்பது, நேரு பெரியவரா லஜபதிராய் பெரியவரா என்பது முதலிய விஷயங்களைப் பற்றி ஐயர் பேசியதும், முதலியார் "ஆமாம்" "சரிதான்" "ரொம்ப உண்மை" "அப்படித் தான்னா" என்று சொல்லிக் கொண்டிருந்ததும் அவ்வப்போது என் காதில் விழுந்து கொண்டிருந்தது.

கடைசியாக, சுமார் 6 மணிக்கு, முதலியார் எழுந்து "நமஸ்காரம், போய் வருகிறேன்" என்று விடை பெற்றுக் கொண்டு போனார். அவர் போனவுடனே நான் அங்கு போய்ச் சேர்ந்தேன். என்னைக் கண்டதும் வாதபுரீசய்யர், "என்ன, அப்பா! உன்னைப் பார்த்துவிட்டு இங்கே வந்தேன், எழுந்து ஓடிவிட்டாயே? இப்போது உட்கார்ந்திருந்தாரே, இங்கே ஒருவர்! அவரைப் போல் இருக்க வேண்டும். விஷயங்களை எவ்வளவு ரஸமாய்க் கேட்கிறார்? எவ்வளவு

# திருமயிலை வாதபுரீசய்யர்!



நன்றாய்க் கிரஹித்துக் கொள்கிறார்? அடடா! அவரை மறுபடி எங்கே பார்க்கலாம் என்று கேட்க மறந்துவிட்டேனே? அதோ போகிறார். கூப்பிடு கூப்பிடு! ஸார்! ஸார்!'' என்று கையைத் தட்டிக் கொண்டு கூப்பிடத் தொடங்கினார்.

நான் அவரைக் கையமர்த்தி, "வேண்டாம்; அவரைக் கூப்பிட்டுப் பிரயோசனமில்லை" என்றேன்.

"ஏன்? ஏன்?"

"நீங்கள் எவ்வளவு சத்தம் போட்டுக் கூப்பிட்டாலும் இரண்டு காதும் செவிடு. இடியிடித்தாலும் கேட்காது!"

"அடபாவி! நிஜமா?"

''முழு நிஜம். அவர் எனக்கு அடுத்த வீட்டுக்காரர்தான்''

அன்று முதல், வாதபுரீசய்யர் என்னைக் கண்டால் முகங்கொடுத்துப் பேசுவதில்லை. அதன் பொருட்டு ஆண்டவனிடம் அளவிலா நன்றியுடையவனாயிருக்கிறேன்.




(கல்கி களஞ்சியம்,
15.6.1932
ஆனந்தவிகடனிலிருந்து)

**அமரர் கல்கி**



# எங்கே என் கண்ணன்?

சிறையில் பிறந்த
இறைவன் எனக்கு
கடமையைச் செய்வதே
பூஜைக்கணக்கு!

- ஸ்ரீ கிருஷ்ணன்

கங்கைக் கரை வெளியில் யாரோ இருவர் பேசிக் கொள்வதுகூட, கணேஷ் வரையில் அவனுக்காக என்றே தோன்றியது. அந்த நிலையிலும் அந்தப் பேச்சு அவனுக்குள் ஒரு கோபத்தைக் கொண்டு வந்தது.

'அதர்மம் அதிகரிக்கும்போது கண்ணன் வருவான்' என்று பல பேர் பல இடங்களில் சொல்லிக் கேட்டிருக்கிறான். அப்போது எல்லாம், ''அது என்ன, அதிகரிக்கும் போது...? அது துளிர்விடும்போதே வந்து அதன் வாலை ஒட்ட நறுக்காமல், அதிகரிக்கிறவரை காத்திருப்பதும் ஒரு தெய்வமா?'' என்று திருப்பிக் கேட்டிருக்கிறான்.

'வாழ்வில் எவ்வளவோ தரிசனங்கள்...!

உயிர் பிரிவதைப் பார்ப்பது என்பது மட்டும் ஏனோ மனதுக்குள் பச்சை குத்திக் கொண்டு விடுகிறது. ச்சே...' கணேஷ் தடுமாறிக் கொண்டே இருக்கும்போது ஒரு குரல்.

''என்ன அம்பி... உன்னை நான் இங்க பார்ப்பேன்னு நினைக்கவேயில்லை...'' என்ற அந்த குரலுக்குரியவர் கணேஷுக்குப் பரிச்சயமான அவன் ஊர் சாஸ்த்ரிகள். பெயர் பஞ்சாட்சரம், ஜோதிடரும் கூட!''

''ஓ... நீங்களா?''

''நானேதான்... நீ எங்க இங்க? பாவம் புண்யம்கறதுலையே நம்பிக்கை இல்லாத பிள்ளையாண்டானாச்சே நீ... கங்கைக்கு வந்துருக்கே?''

''உத்யோக நிமித்தமா காசிக்கு வந்துருக்கேன் ஸ்வாமி. கங்கைக்கு வந்திருக்கறது ஓடற தண்ணியில முங்கிக் குளிக்கறதுக்காக.. உம்ம வரைல இதுல குளிச்சா பாவம் போகும். என்வரைல அழுக்குக் கூட போகாது. பாருங்க... வாரணாசியோட அவ்வளவு சாக்கடையும் இந்த பனித் தண்ணில கலந்து இதையும் ஒரு சாக்கடை ஆக்கிண்டு இருக்கறத...''

''அப்படியே இருக்க... எதுலையும் நெகடிவ்தான் உன் கண்ணுல பளிச்சுன்னு படறது'' என்று சிரித்தவர், அப்படியே ஜோல்னாப் பையைப் பார்த்தார்.

''இது என்ன?''

''ஒரு வயசான சன்யாசி இதை என் கைல கொடுத்து, பத்திரமா பாத்துக்கச் சொல்லிட்டு கங்கைல இறங்கினார். இறங்கி பத்து நிமிஷம் ஆகப் போறது. இந்த நொடி வரை வரலை. ஜல சமாதி பத்தி இங்க நிறைய கேள்விப் பட்டிருக்கேன். இன்னிக்கு அதை நான் பார்த்துட்ட மாதிரி தான் தோணறது.''

''என்னது ஜலசமாதியா...? உன் எதிர்லையா? அதுவும் இந்தக் கற்களை எல்லாம் கொடுத்துட்டா?'' - கேள்வியோடு பையை வாங்கி உள்ளே பார்வையை விட்டவர் அப்படியே திக்குமுக்காட ஆரம்பித்தார்.

உள்ளே கறுப்பாய், வழவழவென்று, சங்கும் சக்கரமும் பொறிக்கப்பட்ட சாளக்கிராமக் கற்கள்...! கண்டகி நதி

**''இது திரும்ப உன்கிட்ட வரும்! எப்படியாவது வரும். அப்ப தெரியும், இது எப்படிப்பட்டதுன்னு''**

"பக்கத்து வீட்டுக்காரி ஏலே பேர்வழி?"
"என்ன விஷயம்?"
"இரவல் கேட்பதும் கொடுப்பதும் சீரியல் பார்ப்பதைக் கெடுக்கும்னு வீட்டுல போர்டு வச்சுருக்கா!"
- அம்பை தேவா



மேலேயே பிணங்களைப் போட்டு எரிப்பதால் வரும் புகை. கணேஷும் பார்த்தான்.

'நான் மட்டும் மந்திரியானேன்னா, முதல்ல இதுக்குத் தடை விதிச்சு கங்கையை சவங்கள் கிட்ட இருந்து மீட்கற வழியைப் பார்ப்பேன்' - என்று மனதுக்குள் சொல்லிக் கொண்டான்.

அந்த சாளக் கிராமக் கற்கள் கொண்ட பை அப்படியே இருந்தது. ஜோசியரும் பார்த்துக் கொண்டே இருந்தார். துணியைப் பிழிந்து துவட்டிக் கொண்டு உலர்ந்ததும் படி ஏற ஆரம்பித்தான்.

தீரத்து ஓட்டத்தில், அதன் உருளல் புரளலில், சிற்றம் சிணுங்கலில் உருவாகும் அறிவுக்கு எட்டாத ஓர் அதிசயம் அந்தக் கற்கள்.

ஒரு கோயிலின் கருவறை விக்ரகத்தை விடவும், சக்திமயமான இல்லத்து தெய்வ ரூபம் அது...!

"ஸ்வாமி... இன்னிக்கு எனக்கு நேரம் சரியில்லை. அதான் இன்னிக்குப் பார்த்த வேலையும் பிரச்னை. வந்த இடத்துலயும் பிரச்னை. இதை நான் இப்ப என்ன பண்ணட்டும்?"

"புரியாமப் பேசறியே... இது ஒரு அருட் புதையல். உன் வாழ்க்கை மாற ஆரம்பிச்சாச்சு. உன் ஜாதகம் இருந்தா பார்த்து இதை நான் கன்ஃபர்ம் பண்ணிடுவேன். வந்தவரும் சாதாரண நபரா நிச்சயம் இருக்க முடியாது. உன் கைல இந்தப் பையைக் கொடுத்துட்டு, ஜலசமாதி ஆகியிருக்கார்னா சூட்சுமக் காரணம் ஏதோ இருக்கு"

ஜோசியர் சொன்னது அவனுக்கு எரிச்சலைக் கிளப்பியது. அந்த ஜோல்னாப் பையை அப்படியே கரை ஓரமாக ஒரு கல்படி மேல் வைத்தான். விறுவிறுவென்று ஆற்றுக்குள் இறங்கினான். முங்கி முங்கி எழுந்தான். நன்றாகத் தேய்த்துக் குளித்தான். மல்லாக்க மிதந்து படுத்து, வாயில் நீர் வாங்கி ஒரு ஃபவுண்டன் போல உமிழ்ந்தான். அப்படியே நாலாபுறமும் பார்த்தான். ஜோதிடர் அவனை வைத்த கண் வாங்காமல் பார்த்தபடியே இருந்தார்.

சற்றுத் தள்ளி அம்பாரமாய்ப் புகை எழும்பி வானில் பரவியபடி இருந்தது. அரிச்சந்திரகாட்டில் படித்துறைக் கற்களின்

"அம்பி... இந்தப் பையை விட்டுட்டுப் போறியே...?"

"எனக்குச் சொந்தமில்லாதது அது"

"ஆனா... உன்கிட்டதானே ஒப்படைக்கப்பட்டது?"

"சரி... நான் இப்ப உங்ககிட்ட ஒப்படைக்கறேன். எனக்கு திடீர்ப் புதையல் எல்லாம் வேண்டாம். நீங்களே வெச்சுக்குங்க..."

"அப்படியா சொல்றே?"

"ஆள விடுங்க சாமி... திரும்பத் திரும்ப கேட்டதையே கேட்டுக்கிட்டு..." அவன் படிகளில் வேகமாக மேலேறினான்.

"நான் இப்ப சொல்றேன்... இது திரும்ப உன்கிட்ட வரும். எப்படியாவது வரும். அப்ப தெரியும் இது எப்படிப்பட்டதுன்னு..." - அவர் கத்தியது அவன் காதிலும் விழுந்தது.

திருச்சி ஜங்ஷன்!

இரண்டு லெதர் பேக், ஒரு மூங்கில் கூடை, பவானி ஜமுக்காளம் பனிச்சென்று தெரியும் படுக்கைக் கட்டு என்று பிளாட்ஃபாரத்தில் காத்துக் கொண்டிருந்தார் சீனு. இடுப்புக்கு கீழே கச்சம். மேலே முழுக்கைச் சட்டை என்று பாண்டித்யமான தோற்றம். காலுக்கு டயர் செருப்பு.

ராஜமும் மடிசாரில் மின்னினான்.

காதிலும் மூக்கிலும் வைரங்கள்... ராஜத்தை யார் பார்த்தாலும் அழுந்தப் பார்த்தார்கள்.

திருக்குறள் எக்ஸ்பிரசும் பிளாட்ஃபாரத்தில் நுழைந்து கொண்டிருந்தது.

"காலம்பற நாலு மணிக்கெல்லாம் இந்த ட்ரெய்ன் எழும்பூர் போய்டும். அஞ்சு மணிக்கெல்லாம் திருவல்லிக்கேணி நரசிம்மனாத்துக்குப் போயிடலாம். போன உடனே தீர்த்தாமாடிட்டு, பார்த்தசாரதி பெருமாள் கோவிலுக்குப் போயிடணும். திருவோண நட்சத்திரம் ஆரம்பிச்சுடுத்து. அந்தப் பெருமாள் சேவை மகா விசேஷம். அப்படியே வந்து நம்ம ஆத்துக் கண்ணனுக்கு திருவாராதனையைப் பண்ணி முடிச்சிட்டு, சாப்ட்டு கிளம்பினா அடுத்து ரயிலைப் பிடிக்க சரியா இருக்கும்..."

"அது சரி... நாளை காலம்பர நரசின்னனாகம் இருக்கு. நாளன்னைக்கு...?"

"நீ திருவாராதனத்தைப் பத்திதானே கேக்கறே?"

"பின்ன...?"

"சொல்றேன். முதல்ல ஏறி உக்காற வழியப் பார்ப்போம். எஸ்ஒன் கோச் எங்க இருக்கு?" - சீனு லக்கேஜ்களைத் தூக்கிக் கொண்டு, ரயில் பெட்டிகளில் ஒன்றைத் தேடி அதில் ஏறி அமரவும் செய்தார். ஏ.சி. கோச்... ஜில்லென்று ராஜத்தின் முகத்தில் ஒரு கிச்சுக் கிச்சு சிரிப்பை நிரந்தரமாக்கியது. சீனுவோ, லக்கேஜ்களை சீட்டுக்குக் கீழே வைத்துவிட்டு அந்த மூங்கில் பெட்டியை எங்கே வைப்பது என்று பார்த்துக் கொண்டு இருந்தார். இறுதியில் இரு பர்த்துக்கு நடுவில் உள்ள ஸ்டாண்டில் வைத்தார். கச்சிதமாக அளவெடுத்த மாதிரி, அதுவும் அமர்ந்து கொண்டது.

"ராஜம்... எப்பவும் பொட்டி மேல ஒரு கண் இருக்கட்டும்.நமக்குக் கீழ் பர்த். மேல படுக்கறவாளை தலையை பொட்டி பக்கமா வெச்சு படுக்கச் சொல்லணும்... கால் படாமப் பாத்துக்கணும்" - என்று வாய்ப்பாடு ஒப்பிப்பது போலப் பேசினார்.

"நான் தூங்கவே போறதில்லை. நீங்க கவலைப் படாம இருங்கோ. நான் பாத்துக்கறேன்."



"தலைவரோட கணக்கு வழக்கை யார் பார்த்துக்கறா?"

"கணக்கை சம்சாரமும், வழக்குகளை வக்கீலும் பார்த்துக்கறாங்க!"

- அம்பை தேவா

"ஆமா நான்தான் தூங்கி வழியப் போறேனாக்கும்? நீ ஒருத்திடி..." -அவரிடம் செல்லமான அலுப்பு. ரயிலும் பிளாட்ஃபாரத்தை விட்டு நீங்கத் தொடங்கியது.

"ரொம்ப நாளாச்சு ரயில்ல போய்.." - என்றபடி வெளியே பார்த்தார். ராஜம் ஒடுக்கிக் கொண்டு அமர்ந்திருந்தாள். புதிய சூழலில் பொருந்திக் கொள்ள முடியாதபடி ஒரு கூச்சம் அது.

"நன்னா ரிலாக்ஸா உக்காரு... அந்த பர்த் பூரா உனக்குத்தான்" - என்றபடியே வெளியே கூர்ந்து பார்த்தார்.

"என்னத்த அப்படிப் பாக்கறேள். திருச்சியை இதுக்கு முந்தி பாத்ததேயில்லையா?"

"பைத்தியம்... சீரங்க கோபுரம் கண்ணுல படும். அதுக்குத்தான்..." அவர் சொல்ல சிறிது நேரத்தில் காவேரிப் பாலத்தின் மேல் ரயில் ஓட, கோபுரமும் கண்ணில் பட்டது.

"ரங்கா..." - என்று கன்னத்தில் போட்டுக் கொண்டார், திரும்பினார். அவர் எதிரில் ஒரு நிறைமாத கர்ப்பிணிப் பெண். கூடவே அவளின் வயதான தந்தை... இருவரின் பார்வையும் அவர்களுக்கான பர்த் என்று அப்பர் பர்த்தைப் பார்த்து, ஊர்ஜிதம் செய்து கொள்வதில் இருந்தது.

(தொடரும்)

# மூனு மணி இம்(ம்)சை!

"**நா**ங்க ரெண்டு பேருமே சன்டேல பொறந்தவங்க. அதனால சன்டே தான் எங்களோட வெரி ஸ்பெஷல் டே..." என்று புன்னகை செய்கின்றனர் இசையமைப்பாளர் தினா - ஹேமமாலினி தம்பதி. 'குட்டி தினா' ராம்கிரண் டி.வியில் பிஸியாக இருக்க... ஸ்ரீதுலாவோ, பொம்மைகளுடன் பிஸி.

"ஆக்சுவலா சன்டேல இன்னொரு ஸ்பெஷலும் இருக்கு... என்னன்னா, அன்னிக்கு மட்டும்தான் என் மனைவி சமைப்பாங்க. மத்தநாள்ல குக் தான் சமைப்பாங்க" என்று தினா நிறுத்த, ஹேமா ஆரம்பிக்கிறார்.

"ஆமாங்க... சன்டே மட்டும் கிச்சன் அன்டர் மை கன்ட்ரோல்... அன்னிக்கு காலைல காபியிலிருந்து ஈவ்னிங் ஸ்நாக்ஸ் வரைக்கும், எல்லாமே என் கையாலதான் செய்து தருவேன்..."

"அப்போ டின்னர்...?"

"அது சஸ்பென்ஸ்... இவருக்கு பரோட்டா ரொம்பப் பிடித்தமானது... அதுக்கு வெஜிடபிள் குருமா செம டேஸ்டா இருக்கும். ஒரு வாரம் பரோட்டான்னா, அடுத்த வாரம் ஆப்பம், பூரின்னு மாத்திக்கிட்டே இருப்பேன்.

"மதியம் 90% வெஜிடேரியன்தான். எப்பாவது நான்-வெஜ். அதுவும் சிக்கன்-65 மட்டும் செய்வேன். லஞ்ச்ல ஒரு வாரம் பிஸிபேளா பாத், வாங்கிபாத் மாதிரி வெரைட்டியா செய்வேன். எது செய்தாலும், கண்டிப்பா ரெண்டு பொரியல் பச்சைக் காய்கறிகள்ல செய்துடுவேன்"

"ஏம்மா... மூணு மணிக்கு ஒரு இம்சை

**சாந்தி பலராமனின்**
**இந்த வார டிஷ்:**
**பைனாப்பிள் டிலைட்**

**தேவையான பொருள்கள்:**

அன்னாசிப்பூ வில்லைகள் - 5
சர்க்கரை சேர்க்காத கோவா - 1 கப்
தூள் பனீர் - 250 கிராம்
சர்க்கரைத்தூள் - 1 கப்
பைனாப்பிள் எஸன்ஸ் - 2 துளிகள்
மஞ்சள் கலர் - 2 துளிகள்
துருவிய பாதாம் - அலங்கரிக்க

* படம்: ஸ்ரீஹரி

**செய்முறை :** அன்னாசிப்பூ வில்லைகளை சதுரங்களாக வெட்டி வைக்கவும். ஒரு வாயகன்ற பாத்திரத்தில் கோவா, பனீர், சர்க்கரை கலந்து, எசன்ஸ், கலர் சேர்த்து மாவாகப் பிசையவும். இந்தக் கலவையை சிறு உருண்டைகளாக்கி நடுவில் குழித்து ஒவ்வொன்றிலும் ஒரு அன்னாசிப்பூ துண்டை அழுத்தவும். பாதாம் தூவி அலங்கரிக்கவும்.





# சமைக்காமலே சாப்பிடுங்க!

# சன்டே சமையல்!

நடக்குமே... சாரி...சர்க்கரை, பால்னு சேர்ந்திசை, அதைச் சொல்லலையே'' என்று தினா மனைவியைச் சீண்ட,

''ஆஹா... ஆரம்பிச்சிட்டாருப்பா...'' என்றபடி சிரிக்கிறார் ஹேமா..

''ஒண்ணுமில்லைங்க... எனக்கு ஒரு



மில்க் ஸ்வீட் செய்யத் தெரியும்... ஆனா இன்னிக்கு வரைக்கும் நான் பேரே வைக்கல(!) அது எப்போதும் எங்க வீட்ல தயாரா இருக்கும். அதுதான் மூணு மணிக்குத் தருவேன். அதைத் தான் அவர் கிண்டல் பண்றாரு. அந்த மில்க் ஸ்வீட்டோட ரெசிபி சொல்லட்டுமா? அதுக்குத் தேவை இரண்டு லிட்டர் பால், முந்திரி 100 கிராம், வெண்ணெய் 200 கிராம், பால்பவுடர் அரை கிலோ. ரெண்டு லிட்டர் பால் ஒரு லிட்டரா ஆகற வரைக்கும் பாலை சுண்ட வச்சுடணும். இப்போ ஒரு பாத்திரத்தில் பால் பவுடரையும், வெண்ணெயையும் போட்டு, பொடியா நறுக்கின முந்திரியைச் சேர்த்து, குழைச்சு நல்லா பேஸ்ட் மாதிரி ஆக்கிடணும். இப்போ இந்த பேஸ்டை கரண்டியால எடுத்து பால்ல வில்லை வில்லையா விடணும். ஒரு கொதி வந்ததும் தட்டைப் போட்டு மூடிடணும். குங்குமப்பூ தூவினா நல்லா கலர்ஃபுல்லா இருக்கும். சூடாவும் சாப்பிடலாம். ஃப்ரிஜ்ல வச்சும் சாப்பிடலாம்.

''அந்த ஸ்வீட்டை சாப்பிட்டுட்டு நேரா கிளம்பி, குரோம்பேட்ல இருக்குற எங்க சித்தப்பா வீட்டுக்குப் போயிடுவோம். அங்கதான் டின்னர்... முதல் நாளே ஃபோன்ல மெனுவைச் சொல்லிடுவோம். எண்ணெய் கத்தரிக்காய், இட்லி இவருக்கு ரொம்ப இஷ்டம். இதைத்தவிர நான்வெஜ் ஐட்டம்களை நாங்க எல்லாருமே ரொம்ப விரும்பிச் சாப்பிடுவோம். வெறுமனே சாப்பிடறது பிடிக்காது. எல்லாரும் ஒண்ணா உட்கார்ந்து, அந்த வாரத்துல நடந்த காமெடியான சம்பவங்களைப் பத்தி, அரட்டை அடிச்சுக்கிட்டே சாப்பிடுவோம். அதுதான் எங்களுக்கு முழுத்திருப்தி தர்ற விஷயம்'' என்று புன்னகை செய்கின்றனர் தினா குடும்பத்தினர்.

- முத்து

படம்: ராஜன்



# அருள்வாக்கு

நம் உள்ளத்தில் ஆசை, கோபம் முதலிய பல வியாதிகள் இருக்கின்றன. முன்பு நாம் எல்லோரும் ஒரு விதத்தில் மூட்டைதூக்கிகளாக இருந்ததால்தான் இந்த வியாதிகள் வந்திருக்கின்றன. நாம் செய்கிற ஒவ்வொரு தப்புக் காரியமுமாகச் சேர்ந்து மூட்டையாகி விடுகிறது. இந்தப் பிறப்புக்கு முன்னால் இன்னொரு பிறப்பில் தப்புக்கள் செய்தோம். அதனால்தான் இப்போது இந்த உடம்பு என்கிற மூட்டை வந்திருக்கிறது. இதில் பழைய தப்புக்களின் வாசனையும் இருக்கிறது. அதனால்தான் ஆசை, கோபம் எல்லாம் நமக்கு இருக்கின்றன. அது போவதற்காகத்தான் குழந்தையாக இருக்கும்போது பள்ளிக்கூடத்துக்குப் போகிறோம். அறியாமை என்கிற வியாதி, படிப்பு என்கிற மருந்தினால் போகிறது. அதோடு நம் கெட்ட குணங்களும் போக வேண்டும். இதற்குப் படிப்பு மட்டும் போதாது. பணிவு வேண்டும். பணிந்து கிடந்தால் கெட்ட குணங்கள் ஓடிப்போகும். தாய், தந்தை, ஆசிரியர், தெய்வம் ஆகியவர்களிடம் பக்தியோடு, படிப்பில் கவனம் செலுத்தி வந்தால் அறிவும் வரும், குணமும் வளரும்.

பணிவு இல்லாமல் படிப்பில் மட்டும் தேர்ச்சி பெற்றால் எவரும் முழு மனிதனாக ஆக முடியாது. 'நமக்கு எல்லாம் தெரியும், நாம் புத்திசாலி' என்ற அகம்பாவம்தான் வெறும் படிப்பினால் உண்டாகும். இப்படிப் பட்டவர்களுக்குப் பகவான் துணை புரிய மாட்டார். பகவானின் அநுக்கிரகம் இல்லாமல் எத்தனை புத்திசாலியானாலும் வாழ்க்கையில் சந்தோஷம் பெற முடியாது.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்

ரூ. 200 பரிசு
பெறும் ஹைக்கூ!

ஏறியது
எங்கே என்று
இறங்காமல்
தேடுகிறான்...
- இரா. கவியரசு,
உள்ளிக்கோட்டை

ஆயில் விலையேற்றம்...
அப்படின்னா
என்ன?
- ஆர். நாகராஜன்,
சென்னை - 117

மிதிப்பது தொடர்கதை -
சைக்கிளை நானும்
என்னை வாழ்க்கையும்.
- தா.மு. இக்பால்,
தஞ்சாவூர்

எண்ண ஓட்டம்
பின்னோக்கி
என்ன ஓட்டம்
முன்னோக்கி?
- தூத்துக்குடி சேகர்

ஹைக்கூ
போட்டி
வைத்தாலும்
வைத்தோம்!
கற்பனைப்
பெடலை
மிதித்து, கவிதை
உலகுக்கே போய்
விட்டார்கள்
வாசகர்கள்! சிறந்த
கவிதைகள் இங்கே...

பெடல்களின் மீதேறி
வாழ்க்கையை உருட்டுகிறது
சக்கரமாய் கால்கள்
- சா. இலாகுபாரதி,
சென்னை - 15



# எழுதுங்கள் ஒரு கவிதை!
## –போட்டி முடிவு

# இன்னுமா?

டெல்லியிலிருந்து திருநெல்வேலி வரும்போதெல்லாம் திருச்செந்தூருக்குப் போவது என்னுடைய வழக்கம். என் பிள்ளைகளுக்கும் செந்திலாண்டவர் இஷ்ட தெய்வமாக மாறிக் கொண்டிருந்தார். டாக்சி எடுத்துக் கொண்டு கிளம்பினோம். டாக்சி டிரைவர் நன்றாக ஓட்டிக் கொண்டு வந்தார். என் மகள் நித்யா ஆங்காங்கே காரை நிறுத்தி, வீடியோ எடுத்துக் கொண்டு வந்தாள். வாழைத் தோட்டங்கள், கருங்குளம் குன்று, தாமிரபரணி ஆறு என்று அள்ளிப் போட்டுக் கொண்டே வந்தாள்.

"ஏடி! பார்த்து வீடியோ எடு. அங்கங்க ஜனங்க நம்பர் ஒன், நம்பர் டூ போய்க் கொண்டிருப்பார்கள். அதையும் சேர்த்து வீடியோ எடுத்திடாதே!" என்று நான் சொல்ல எல்லோரும் சிரித்தார்கள்.

"ஸ்ரீ வைகுண்டம் போய்விட்டு திருச் செந்தூர் கோவிலுக்குப் போயிடலாம்" என்று டிரைவரிடம் சொன்னேன்.

"சரிங்க" என்றார். ஸ்ரீ வைகுண்டம் பாலத்துக்குள் கார் திரும்பியது. பாலத்தைக் கடந்து கார் போய்க் கொண்டிருக்கும்போது, திடீரென ஒரே சத்தம். ரோட்டில் ஒரு சிறு கும்பல், மூன்று பேரைத் துரத்திக் கொண்டு வந்தது. கண்ணிமைக்கும் நேரத்துக்குள் மூன்று பேரையும் வெட்டிச் சாய்த்தனர். மூன்று பேரும் ரத்த வெள்ளத்தில் விழுந்தனர். நாட்டு வெடிகுண்டுகள் வீசப்பட்டன. என்ன நடக்கிறது என்று புரிவதற்குள், எங்கள் டிரைவர் காரைத் திருப்பினார். படுவேகமாக காரை ஓட்டிக் கொண்டு வந்தார். என்ன நடந்தது என்று யோசிக்கும் முன்பு நாங்கள் வெகு தூரம் வந்து விட்டோம்.

"என்னது! இப்படி நடு ரோட்டில் கொலை நடக்குது?"

"இப்ப என்ன பண்ணலாம்?"

"திருநெல்வேலிக்கே திரும்பிப் போயிடலாமா?"

"அதெப்படிங்க! சாமி கும்பிடக் கிளம்பிட்டு எப்படி சும்மா திரும்பறது?"

"இல்லம்மா! வெட்டுனவனும், செத்தவனும் வெவ்வேறு ஜாதின்னா, ஜாதிக் கலவரம் வரலாம்" என்றார் டிரைவர்.

"நீங்க பாட்டுக்கு திருச்செந்தூருக்குப் போங்க. அப்படி கலவரம் எதுவும் வந்தால், ராத்திரி திருச்செந்தூரில் தங்கி விட்டுத் திரும்பலாம்."

"அதெல்லாம் முடியாது. முருகர் நாம சாமி கும்பிட வரலைன்னு கண்ணைக் குத்திட மாட்டாரு. வண்டியத் திருப்புங்க. திருநெல்வேலிக்குப் போய்விடலாம். முதல்ல பத்திரமாக வீடு போய்ச் சேருவோம்" என்றேன்.

"அதெல்லாம் முடியாது. சாமி கும்பிடக் கிளம்பியாச்சு. முருகரை தரிசிக்காமல் திரும்பக் கூடாது"

"என்ன பிடிவாதமிது!" என்றேன் நான்.

"எங்கேயும் வேண்டாம். நேரா போலீஸ் எஸ்.பி. ஆபீஸுக்குப் போங்க" என்று என் மகள் குரல் ஓங்கி ஒலித்தது.

"என்ன சொல்ற?" என்று திரும்பிப் பார்த்தேன்.

"அப்பா! அந்தக் கொலையை வீடியோ எடுத்திருக்கிறேன். இதை அப்படியே போலீஸிடம் கொடுக்கணும்" என்று சொல்ல, நானும் என் மனைவியும் அதிர்ந்து போனோம்.

"உன்னை யாருடி வீடியோ எடுக்கச் சொன்னது? சரி விடு! வெளியே சொல்லாதே!"

**அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி - 2005ல் பிரசுரத்துக்குத் தேர்வான கதை**

"கந்து வட்டி கந்தசாமி?"ன்னு படத்துக்குப் பேர் வெச்சிருக்கீங் களே ஏன்?"

"ஃபைனான்ஷியர் பேர் அது தான்!"

- பிரபாகரன்



"பட்டப் பகல்ல வெட்டிக் கொல்றான். போலீஸ்ல புடிச்சுக் கொடுக்க வேண் டாமா?"

"இதெல்லாம் நமக்குத் தேவையில்லாத வேலை."

"அஸ் எ ரெஸ்பான்ஸிபிள் சிட்டிசன், வி நீட் டு ஹெல்ப் போலீஸ்."

"இங்கிலீஷில் பேசினால் நீ சொல்வது சரியாயிடாது. கோர்ட், போலீஸ், சாட்சின்னு நாம் அலைய முடியாது. திருச்செந்தூருக்குப் போவோம். சாமியைக் கும்பிடுவோம். நல்ல மார்க் கிடைக் கணும்னு வேண்டிக்கோ! டெல்லியைப் பார்த்துப் போய்ச் சேருவோம்" என்றாள் என் மனைவி.

"நித்யா! சொல்றதைக் கேளு. சும்மா போற ஆளை யாரும் வெட்டுவதில்லை. என்ன பிரச்னையோ! செத்தவன் என்ன தப்பு பண்ணினானோ! நம்முடைய நியா யங்களும் அவர்களுடைய நியாயங்களும் வெவ்வேறானவை. நாம் அதில் தலை யிடுவதோ, அதில் நியாயம் சொல்லு வதோ தவறு. நாம் நம்முடைய எல்லை களைத் தாண்டுவது நமக்கு ஆபத்தாக முடியும்" என்றேன். என்னுடைய வார்த் தைகள் எனக்கே ஆச்சரியத்தைத் தந்தன. முப்பது வருடங்களுக்கு முன்னால் என் அம்மா என்னிடம் சொன்ன வார்த் தைகள். இதே மாதிரி ஒரு சந்தர்ப்பத்தில் தான் அம்மா எனக்கு இதைச் சொன் னாள்.

அப்போது நான் ஸ்ரீ வைகுண்டம் குமரகுருபரர் பள்ளியில் படித்துக் கொண்டிருந்தேன். என்னுடைய சித்தி பையன் ஆறுமுகமும் என்னுடன் படித்தான்.

ஸ்ரீவைகுண்டம் அழகான ஊர். தாமிரபரணி ஆறு ஓடும் ஊர். பள்ளிக்கூடம் பிடித்ததோயில் லையோ, ஊர் பிடித்துப் போனது. ஏனெனில் படிப்பதை விட ஸ்ரீவைகுண்டத்தில் வேறு சில விஷயங்கள்தான் ரொ ம்பப் பிடிக்கும். தாமிரபரணி ஆற்றில் திருமஞ்சன படித்துறை யில் இறங்கிக் குளிப்பது மிகவும் பிடித்த விஷயம். காலையில் ஆற்றில் போய் ஆட்டம் போடு வோம். சாயங்காலம் ஒரு நடை போவோம். தாலுகா ஆபிஸுக்கு எதிரே ஒரு கடையில் நல்ல வறுத்த கடலையும், பர்பியும் கிடைக்கும். அதை வாங்கிச் சாப் பிட்டுக் கொண்டே பாலத்தின் மேல் நடக்கப் பிடிக்கும். இதையெல்லாம் விட ரொம்பப் பிடிச்ச விஷயம், ஜவஹர் தியேட்டரில் சினிமா பார்ப்பது. அப்போ தெல்லாம் டி.வி கிடையாது. சினிமாவும், ரேடியோவும்தான் பொழுதுபோக்கு. அம்மா அடிக்கடி சினிமா பார்க்க விட மாட்டாள். அதனால் மொட்டை மாடி யில் படுக்கப் போவது போல் போய்ப் படுப்போம். பிறகு மெதுவாக எழுந்து செகண்ட் ஷோ பார்க்கப் போய் விடு வோம். படம் முடிந்தவுடன் சத்தமின்றி வந்து படுத்து விடுவோம். இப்படி ஏகப் பட்ட படங்கள் பார்த்திருக்கிறோம். பார்த்த படங்களையே மீண்டும் மீண்டும் பார்ப்போம். அதனால் முக்கியமான பாட்டுக்கள் முடிந்தவுடன் கிளம்பி விடு வோம். இப்படித்தான் ஒருமுறை ஜவஹர் தியேட்டரில் 'அன்பே வா' போட்டிருந் தார்கள். ஆறாவது முறையாக பார்க்கக் கிளம்பி விட்டோம். பல முறை பார்த்த படமென்பதால் 'அன்பே வா' பாடல் முடிந்தவுடன் கிளம்பி விட்டோம். ஊர் அடங்கியிருந்தது. சினிமா இன்னும் முடியவில்லை என்பதால், தெருவில் யாரு மேயில்லை. திமுதிமுவென யாரோ ஓடி வரும் சத்தம் கேட்டது. நாங்கள் நுழைய விருந்த தெருவில் யாரோ ஓடினார்கள். அவரைத் துரத்திக் கொண்டு இரண்டு

பேர் ஓடினார்கள். நாங்கள் பார்க்கும் போதே ஓடியவரைப் பிடித்து விட்டார்கள். ஒரே வெட்டு! அப்படியே ரத்த வெள்ளத்தில் சாய்ந்தார். காரியம் முடிந்தவுடன் வேகமாக ஓடிப் போய் விட்டார்கள். எனக்கு வெட்டிய ஆளை நன்றாகத் தெரியும். தெருமுனையில் கடை வைத்திருக்கும் பலவேசம்தான்.

**நா**ங்கள் ஒரே ஓட்டமாக வீட்டுக்கு ஓடி வந்தோம். கதவை வேகமாகத் தட்டினோம். அம்மாதான் கதவைத் திறந்தாள்.

"என்னங்கடா?"

அம்மாவைத் தள்ளிக் கொண்டு உள்ளே நுழைந்தோம்.

"கதவை மூடும்மா!"

"எதும் கனவு கண்டு பயந்தியா?"

"கனவில்லை. நிஜம்." அம்மாவிடம் நடந்ததைச் சொன்னோம்.

"ஏண்டா! சனியனே! மொட்டை மாடியில் நீ படுத்துத் தூங்கிட்டிருக்கன்னு நினைச்சுக்கிட்டு இருந்தால், நீ சினிமாவுக்குப் போயிருக்க. சரி! போனதுதான் போனீங்க! படம் முடியறவரைக்கும் பார்த்துட்டு கூட்டத்தோட வரவேண்டியதுதானே! இந்த மாதிரி வம்பை விலை கொடுத்து வாங்கிட்டு வந்திருக்க. ஐயோ! நான் இப்ப என்ன செய்வேன்?"

புலம்பியபடி தாத்தாவைப் போய் எழுப்பினாள். தாத்தா மெதுவாக கொசுவலையிலிருந்து வெளிப்பட்டார். அமைதியாக நடந்ததை முழுவதும் கேட்டார். மெதுவாக என்னைப் பார்த்து, "நீ பார்த்ததை வேறு யாரும் பார்த்தாங்களா?" என்று கேட்டார்.

எனக்குப் புரியவில்லை.

"வேறு யாரும் கொலையைப் பார்த்தாங்களான்னு தெரியாது"

"அது நமக்கு அவசியமில்லாத விஷயம். நீ கொலையைப் பார்த்ததை வேறு யாரும் பார்த்தாங்களா?"

"இல்லை. நாங்க மறைவாகத்தான் நின்று கொண்டிருந்தோம்"

"அது போதும். பேசாமல் இவங்களைக் கூட்டிக் கொண்டு திருநெல்வேலிக்குப் போய்விடு. பத்து நாள் கழித்து வாங்க! இங்கயிருந்து ஏதாவது உளறிவிடக் கூடாது" என்று சொன்னபடி தாத்தா படுக்கப் போனார். எனக்கு தாத்தாவின் லாஜிக்கே புரியவில்லை.

"தாத்தா, போலீஸுக்குப் போய் சொல்ல வேண்டாமா?" என்று கேட்டேன்.

"ச்சீய்! முட்டாப் பய" என்று சொன்னபடி, மீண்டும் கொசுவலைக்குள் நுழைந்து விட்டார்.

"என்னம்மாயிது! தாத்தா போலீஸ் ஸ்டேஷனுக்கு வருவார்ன்னு நினைச்சேன். இப்படி ஒரு கொலை நடந்திருக்குது. நாம போலீஸிடம் போய்ச் சொல்ல வேண்டாமா? வெட்டிக் கொன்னது பலவேசம். எனக்குத் தெரியும். நான் பார்த்தேன். நடுரோட்டில் வெட்டிக் கொல்லுகிறான். என்னால பார்த்துட்டு சும்மாயிருக்க முடியாது."

"சொல்றதைக் கேளு. சும்மா போற ஆளை யாரும் வெட்டுவதில்லை. என்ன பிரச்னையோ! செத்தவன் என்ன தப்பு பண்ணினானோ! நம்முடைய நியாயங்களும் அவர்களுடைய நியாயங்களும் வெவ்வேறானவை. நாம் அதில் தலையிடுவதோ, அதில் நியாயம் சொல்லுவதோ தவறு. நாம் நம்முடைய எல்லைகளைத் தாண்டுவது ஆபத்தாக முடியும்" என்றாள் அம்மா. என் மகள் போல் அப்போது என்னால் பதில் பேசிக் கொண்டிருக்க முடியாது. சரியென்று தலையை ஆட்டினேன். பிறகு அந்தக் கொலையை மறந்தே போனேன். ஆனால் அம்மா சொன்ன வாக்கியம் மனதில் பதிந்திருந்தது.

முப்பது வரு



"காதல் ரசம் சொட்டச் சொட்ட கவிதை பாடவா?"

"அதெல்லாம் வேணாம்... தக்காளி ரசமோ பூண்டு ரசமோ செஞ்சு வைங்க போதும்!"

- ராம் ஆதிநாராயணன்

# Mr.மெட்ராஸ்



டங்கள் கழித்து அப்படியே வந்து விழுகிறது.

திருச்செந்தூருக்குப் போய் விட்டு இரவு திரும்பினோம். சித்தி பையன் ஆறுமுகம் என்னைப் பார்க்க வந்திருந்தான்.

"உனக்கு ஞாபகமிருக்கா? நாம 'அன்பே வா' படம் பார்க்கப் போனபோது நடந்த விஷயம்"

"அதை மறக்க முடியுமா? அந்தக் கொலையை இப்ப நினைச்சாக்கூட உடம்பு நடுங்குது."

"இன்னைக்கு அதே மாதிரி நடந்தது."

"என்ன சொல்றே!"

நான் நடந்ததைச் சொன்னேன்.

"மூணு பேரை எங்க கண் முன்னாலேயே கொன்னாங்க! இன்னமுமா இங்க அரிவாளைத் தூக்கிட்டு அலையறானுக!"

"ஜனங்க மாறவே மாட்டாங்க! அப்படியே இருக்காங்க."

"நாம மட்டும் ரொம்ப மாறிட்டமா! நாமளும் அப்படியே இருக்கோம்" என்று என் மகள் கிண்டலாகச் சொன்னாள். நான் அவளை முறைத்தேன்.

"அது எப்படிடா! எப்பவும் உன் முன்னால வந்து கொலை பண்ணறாங்க!"

"ரொம்ப சிம்பிள் அங்கிள். எங்கப்பா யார் கிட்டவும் வாயே திறக்க மாட்டார்னுதான்" என்று சொன்னபடி எழுந்த மகளை நான் முறைத்தேன். அவள் கவலைப் படாமல் எழுந்து போனாள்.

மறுநாள் பால்கனியில் நின்றபடி என் மகளும், மகனும் பேசிக் கொண்டிருந்தார்கள். நான் வந்ததைக் கவனிக்கவில்லை.

"அக்கா! காலையில் எங்க போன?"

"போஸ்ட் ஆபீஸ்."

"எதுக்கு?"

"நான் எடுத்த வீடியோவை மூணு காப்பி நேத்தே எடுத்துட்டேன். டி.ஜி.பி, டி.ஐ.ஜி, எஸ்.பி எல்லாருக்கும் அனுப்பிட்டேன்."

"ஐயோ! அப்பாவுக்குத் தெரிஞ்சா?"

"எனக்கு அதைப் பத்திக் கவலையில்லை. நாட்டுல என்ன நடந்தாலும் பார்த்துக்கிட்டு சும்மா போக முடியாது. இன்னமுமா நடக்குதுன்னு வருத்தப்பட்டால் மட்டும் போதாது. அதை மாற்றுவதற்கு சின்ன துரும்பைக் கூட எடுத்துப் போடாதவர்கள், குறை சொல்லுவதற்குத் தகுதியில்லாதவர்கள். கண் முன்னால ஒரு கொலையைப் பார்த்திருக்கிறேன். அதை நான் போலீசுக்குச் சொல்லியிருக்கேன். என்ன வருதுன்னு பார்க்கலாம். நான் பயப்படலை."

என் மகள் தைரியமாகப் பேசிக் கொண்டிருந்தாள். ஒரு நிமிடம் அதிர்ச்சியாயிருந்தது. அடி வயிற்றில் பயம் பரவியது. ஆனாலும் என் மகளைக் குறித்துப் பெருமையாயிருந்தது. ○

# நடக்குமென்பார் நடக்கும்!

தஞ்சை பரத்வாஜ்

**21.9.2005 முதல் 27.9.2005 வரை**

**மேஷம்:** ஆடை ஆபரண வஸ்துகள் சேரும். திருமணக் காரியம் கை கூடும். சத்ரு தொல்லை விலகும். வேலையில் இருந்து வந்த நெருக்கடிகள் குறைந்து உத்தியோகஸ்தர்களுக்கு பணி உயர்வு (அ) வருவாய் மிகுதி ஆகும். வேலை தேடுபவர்களுக்கு வேலை கிடைக்கும். மாணவ மாணவிகள் படிப்பில் எதிர்பார்க்கும் எண்ணங்கள் நிறைவேறும். சிலருக்கு வெளிநாடு செல்லக்கூடிய வாய்ப்பு வரும். வியாபாரிகள் மேன்மை அடைவார்கள். கலைஞர்களுக்கு புதிய ஒப்பந்தங்கள் கையெழுத்தாகும். சனீஸ்வர வழிபாடு செய்து வரவும்.

**ரிஷபம்:** யோகத்தைத் தரும் வாரம். தனம், வாக்கு, குடும்பம் மேல் ஓங்கும். திருமணம் கைகூடும். இட மாற்றம் ஏற்படும். சுபச் செலவு வரும். உத்தியோகத்தில் இடமாற்றம், பதவி உயர்வு வரும். உடல்நிலையில் கவனம் அவசியம். குழந்தைகளால் மனக்கவலை வரலாம். ராகு, கேது, குரு வழிபாடு செய்து வரவும்.

**மிதுனம்:** அற்புதமான வாரம். மன நிம்மதி கிடைக்கும். உடல் நிலையில் இருந்த கோளாறுகள் போகும். குழந்தைகள் வழியில் சுபகாரியம் நடக்கும். வெளிநாடு செல்லும்படியான வாய்ப்பு வந்து சேரும். திருமணம் கை கூடும். வீடு/வாகனம் வாங்க ஏற்ற காலம். ஆடை ஆபரணப் பொருள்கள் வாங்குவீர்கள். நீண்டநாள் எண்ணங்கள் நிறைவேறும். மாணவ மாணவியர்களுக்கு உயர்படிப்புக்கு வழிவகை ஏற்படும். வியாபாரிகள் புதிய தொழில் தொடங்குவார்கள். ராகு/கேது வழிபாடு நல்லது.

**கடகம்:** ரொம்ப நல்ல வாரம். உத்தியோக ரீதியில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். டென்ஷன் குறையும். தொழில் வழியில் இட மாற்றம் ஏற்படும். மாணவ மாணவியருக்கு நற்பலன் கிடைக்கும். திருமணத் தடைகள் விலகும். சுபகாரியம் கைகூடும். வியாபாரிகள் ஏற்றம் பெறுவார்கள். கலைஞர்கள் புதிய வாய்ப்புகளைப் பெறுவார்கள்.

**சிம்மம்:** எதிலும் நிதானம்

அவசியம். வாக்குவாதம் தவிர்க்கவும். கைப்பொருள் மீது கவனம் தேவை. மாணவ மாணவியர் படிப்பில் விழிப்புடன் இருக்கவும். யாருக்கும் ஜாமீன் போட வேண்டாம். உணவுக் கட்டுப்பாடு அவசியம். ராகு/கேது/ சனி/ குரு வழிபாடு செய்தல் நலம்.

**கன்னி:** எதிலும் வெற்றி வாகை சூடும் வாரம். கல்வி வளம் மேன்மை பெறும். வியாபாரிகளுக்கு தொழில் அபிவிருத்தி ஏற்படும். வீடு, வாசல்,ஆடை ஆபரண அலங்காரப் பொருள்கள் சேரும். குழந்தைகளால் சந்தோஷம் ஏற்படும். வேலை மாற்றம், பணி உயர்வு, வெளிநாடு செல்லக் கூடிய வாய்ப்பு வீட்டுக் கதவைத் தட்டும். புதிய தொழில் தொடங்க ஏற்ற காலம். கலைஞர்கள் ஏற்றம் காண்பார்கள். ராகு/கேது வழிபாடு சிறந்தது.

**துலாம்:** நீண்டநாள் முடிவு பெறாத வழக்கு, வியாஜ்ஜியம் வெற்றி பெறும். திருமணக் காரியம் கைகூடும். உடல் நலிவு சரியாகும். உத்தியோகத்தில் உழைப்புக்கு ஏற்ற வருவாய் கிடைக்கும். வேலை இல்லாமல் இருப்பவர்களுக்கு வேலை கிடைக்கும். வீடு வாசல் வாங்கலாம். வியாபாரிகளுக்கு பொருளாதார மேன்மை ஏற்படும். சிலருக்கு வெளிநாடு சென்று வர கூடிய வாய்ப்பு ஏற்படும். கலைஞர்களுக்கு ஏற்றம் கிட்டும். சனி/குரு வழிபாடு சிறந்தது.

**என் இரண்டாவது மகன் அமெரிக்காவில் எம்.எஸ் படிக்கிறான். அவனுக்கு அங்கேயே வேலை கிடைக்குமா? எப்போது திருமணமாகும்?**

**- ஆர். ராமகிருஷ்ணன், மயிலாடுதுறை**

உங்கள் மகனுக்கு 24 வயதில் வெளிநாட்டுப் பணி கிடைக்கும். 26 வயதில் திருமணம் கைகூடும். உறவில் அமையாது. உடன்பிறந்தவர் இருவர் உள்ள, நன்கு படித்த பெண்ணாக, மேற்கு திசையிலிருந்து, வந்து அமையும்.

**என் மகனுக்கு பி.ஈ படித்தும் நல்ல வேலை அமையவில்லை. அவனுக்கு எப்போது நல்ல வேலை கிடைக்கும்? ஆயுள், ஆரோக்கியம், திருமணம் பற்றியும் தெரிவிக்க வேண்டுகிறேன்.**

**- எஸ்.என். நிர்மலா, கோவை.**

உங்கள் மகனுக்கு நவம்பர் 2005க்குப் பின் வெளிநாட்டு நிறுவனத்தில் வேலை கிடைக்கும். வெளிநாட்டுக்குச் சென்று வேலை செய்யும் யோகம் இருக்கிறது. இந்தியாவில் நிரந்தரப் பணி கிடைப்பது சிரமம். 26 வயதில் பெரியவர்கள் நிச்சயித்தபடி திருமணம் நடக்கும். பிறந்த ஊருக்கு அருகில், குடும்பத்தில் ஒரே பெண்ணாக இருக்கும் வரன் அமையும்.

**என் மகன் 4 வயதிலிருந்தே மாற்றி மாற்றி**

**விருச்சிகம்:** மேன்மை ஆன வாரம். சுபகாரியம் கைகூடும். சிலருக்கு குடும்பத்தை விட்டு வெளிதேசம் செல்லும் வாய்ப்புக் கிட்டும். பணபற்றாக்குறை வராது. குடும்பத்தில் சுபநிகழ்ச்சிகள் நடக்கும். குழந்தைகளால் சந்தோஷம் ஏற்படும். சுப விரயம் ஏற்படும். வீடு/வாகனம் வாங்க ஏற்ற நேரம். வியாபாரிகள் தொழில் முன்னேற்றம் காண்பர். குரு/ராகு/கேது வழிபாடு செய்வது நலம்.

**தனுசு:** நீண்ட நாட்களுக்குப் பிறகு நற்பலனைப் பெறப் போகும் வாரம். சுப நிகழ்ச்சிகள் கைகூடும். வேலையில் இருந்து வந்த தொல்லைகள் குறைந்து நற்பலன் கிடைக்கும். மன உளைச்சல் இருந்தாலும் நினைத்த காரியம் கைகூடும். பொருளாதாரச் சிக்கல் விலகும். வியாபாரிகளுக்கு தொழில் முன்னேற்றம் தெரியும். உத்தியோகஸ்தர்களுக்கு நல்ல மாறுதல் கிடைக்கும். சிலருக்கு அந்நிய நாடு செல்லும் வாய்ப்பு வரும். கலைஞர்களுக்கு முன்னேற்றம் கிட்டும். வீடு வாகனம் வாங்கலாம். ராகு/கேது வழிபாடு செய்யவும்.

# பரத்வாஜ் பதில்கள்

உடல் உபாதைகளால் துன்பப்படுகிறான். அவனுக்கு உடல்நலம் கிடைக்குமா? பரிகாரம் ஏதும் செய்ய வேண்டுமா?

- எம். பரத்வாஜ், நாக்பூர் - 10

ஜாதகப்படி உங்கள் மகனின் உடற்கோளாறு வைத்தியத்துக்குக் கட்டுப்படக் கூடியது அல்ல. டிசம்பர் 2006க்குப் பின் பூரண குணம் கிடைக்கும். கவலை வேண்டாம். ஆதித்ய ஹிருதயம் படித்து வருதலும், இறைவனை விளக்கேற்றி வழிபடுதலும், விரைவில் குணம் பெறச் செய்யும்.

**என் பேத்திக்கு 27 வயதாகிறது. திருமணம் இன்னும் கைகூடவில்லை. எப்போது திருமணம் நடக்கும்?**

- எஸ். ராமநாதன், மதுரை - 14.

உங்கள் பேத்திக்கு வருகிற தை மாதத்துக்குப் பின் திருமணம் கைகூடும். மேற்கு/ தெற்கு திசையிலிருந்து, உடன்பிறந்தவர் இருவர் உள்ள, வெளிநாட்டில் வேலை செய்பவராக, வரன் அமையும். சர்ப்ப தோஷம் உடைய ஜாதகமாகச் சேர்க்கவும்.

**என் மகளுக்கு 8ல் ராகு இருப்பதால் பாதிப்பு இருக்குமா? அவள் எந்தத் துறையில் படித்தால் முன்னேறலாம்? எதிர்காலம் எப்படியிருக்கும்?**

- காயத்ரி, மதுரை

உங்கள் மகளுக்கு தொழில் நுட்பத் துறையில் முன்னேறும் யோகம் உள்ளது. எதிர்காலம் நன்றாக இருக்கும். 8ல் ராகு இருப்பதால் சர்ப்ப தோஷம் உள்ள ஜாதகமாக திருமணத்துக்குப் பார்ப்பது நன்மை தரும். வேலையே கதி என்று இருக்கக்கூடிய ஜாதகம். வேறு குறையேதும் இல்லை.

**மகரம்:** எதிலும் டென்ஷன் இருக்கும். உத்தியோகத்தில் இட மாறுதல் ஏற்படலாம். சிலருக்கு வீடு மாறும் சூழ்நிலை உருவாகும். குழந்தைகள் வழியில் சுபகாரியம் கைகூடும். முயற்சி செய்யும் காரியம் வெற்றி அளிக்கும். வியாபாரிகளுக்கு நல்ல பலன் கிடைக்கும். குழந்தைகளால் சுபகாரியம் நடக்கும். குரு/சனி வழிபாடு நலம்.

**கும்பம்:** அற்புதமான வாரம். தடைப்பட்டு வந்த சுபகாரியம் தடை இன்றி நடக்கும். குழந்தைகள் வழியில் திருமணம் கைகூடும். வாகன சௌக்கியம் கிட்டும். உத்தியோகஸ்தர்களுக்கு வேலையில் இருந்து வந்த கஷ்டம் குறைந்து நற்பெயர் ஏற்படும். சிலருக்கு அந்நிய நாடு செல்லும் வாய்ப்பு வந்து சேரும். நீண்ட தூரப் பயணம் ஏற்படும். விலகி இருந்த குடும்பம் ஒன்று சேரும். ராகு/கேது வழிபடுதல் நலம்.

**மீனம்:** கஷ்டம் விலகி நல்லது நடக்கும். மனக்குழப்பம் போகும்.வேலையில் இருந்து வந்த கஷ்டங்கள் விலகும். புதிய முயற்சிகள் வெற்றி அளிக்கும். புத்திரபாக்யம் கிட்டும். சிலர் அயல்நாடு செல்வார்கள் வீடு வாசல் வாங்க ஏற்ற நேரம். குழந்தைகள் வழியில் சுப காரியம் நடக்கும். வியாபாரிகளுக்கு பொருளாதார மேன்மை கிட்டும். கலைஞர்களுக்கு நல்ல காலம். ராகு/கேது/குரு வழிபடுதல் நலம். ○



என்னால் ஒரு விஷயத்தை நிச்சயமாகச் சொல்ல முடியும். உங்கள் வீட்டின் டிரைவரை "அண்ணா!" என்று கூப்பிடுகிறீர்களா? சமையல்காரர் சோர்வாகத் தென்பட்டால் "சாப்பிட்டீங்களா?" என்று கேட்கிறீர்களா? நீங்கள் வெளியே புறப்படும்போது செக்யூரிட்டி சொல்லும் வணக்கத்துக்கு பதில் வணக்கம் சொல்கிறீர்களா? நான் நேசிக்கும் சினிமா மீது சத்தியம் செய்து சொல்கிறேன், பூக்களைப் விடவும் மென்மையான மனம் உங்களுடையது.

பல சினிமாக்காரர்கள் வீடுகளில் டிரைவர் மூன்று வருடங்களுக்குமேல் இருக்க மாட்டார். சமையல்காரர்களும் அடிக்கடி மாறிவிடுவார்கள். ஆனால் என் தங்கையின் வயதை விட எங்கள் வீட்டின் டிரைவர் சண்முகம் அண்ணாவுக்கு சர்வீஸ் அதிகம். எங்கள் குடும்பத்தில் ஓர் உறுப்பினர் போலவே பழகி வந்திருக்கும் அவரை, பள்ளியில் படிக்கும்போது ஒருமுறை அவசரப்பட்டு திட்டி விட்டோம். இதைக் கவனித்து விட்ட அப்பாவுக்கு அப்படியொரு கோபம். "நீங்கள் எல்லாம் என்ன சூப்பர் மேன்களா? அவர் கார் ஓட்டவில்லை என்றால் பள்ளிக்கு எப்படிப் போவீர்கள்? நம்மால் செய்ய முடியாத கடினமான வேலைகள் எவ்வளவோ இருக்கின்றன. அவற்றையெல்லாம் இழிவாகக் கருதாமல், கடமையாகக் கருதி உழைக்கிற யாரையும் அலட்சியப்படுத்தக் கூடாது. அவர்களை வணங்க வேண்டும். நமது தகுதிக்கு உயர அவர்களுக்கு உதவி செய்ய வேண்டும்" என்று அறிவுரை சொன்னவர், "நீங்கள் போட்டிருக்கும் டிரஸ், ஷூ, புக்ஸ், பேக், இதையெல்லாம் செய்தவர்களின் முகங்களைப் பார்த்திருக்கிறீர்களா? நாம் பயன்படுத்தும் ஒவ்வொரு பொருளிலும் முகம் தெரியாத ஒரு தொழிலாளியின் உழைப்பு ஒளிந்திருக்கிறது. சக மனிதனைச் சார்ந்திருப்பதுதான் மனித வாழ்க்கை. இங்கே இழிவான வேலையென்று எதுவுமில்லை. முதலில் சண்முகத்திடம் மன்னிப்பு கேளுங்கள்" என்றார். நாங்கள் மன்னிப்புக் கேட்டதோடு நிற்கவில்லை. அன்று முதல் வீட்டுப் பணியாளர்களை குடும்பத்தில் ஒருவராகப் பார்த்துப் பழகியிருக்கிறோம்.

இதனால் வேலைக்குச் சேர்ந்த முதல் நாள் அலுவலக அறையைக் கொஞ்சம் சுத்தம் செய்யுங்கள் என்று சொன்னபோது, எனக்கு அதிர்ச்சியாகவோ, ஆச்சர்யமாகவோ இல்லை. அலுவலகத்தின் மிதியடியை தூசி தட்டிப் போட்டு எனது வேலையை ஆரம்பித்தேன். அதே தொழிற்சாலையில் இருநூற்றி ஐம்பது பேரை நிர்வாகம் செய்யும் அளவுக்கு என்னால் அங்கே வளர முடிந்தது. அந்த வளர்ச்சியின் பின்னணியில் ஓர் உயர்ந்த உள்ளம் என் விரல் பிடித்து நடைபயிலக் கற்றுக் கொடுத்தது. அவர் தியாகு சார். என்னை இன்டர்வியூ செய்து




வேலைக்கு அமர்த்திக் கொள்ளலாம் என்று சிபாரிசு செய்தவர்.

கல்லூரி என்றால் முதல் பீரியட் முடிந்த கையோடு கட் அடித்து விடலாம். அட்டெண்டன்ஸ் கிளார்க்கிற்கு காசு கொடுத்து சரி பண்ணிவிடலாம். இது ஏமாற்றமுடியாத உழைப்பு. காலை எட்டரை மணிக்கு உள்ளே போனால், மாலை ஆறரை மணிக்குத்தான் வெளியே வர முடியும். வேலை முடியவில்லையென்றால், இரவு பத்து மணி ஆகிவிடும். "எவ்வளவு வேலை இருந்தாலும் மாலை ஆறு மணிக்குள் செய்து முடிக்க இயலாதவன் இந்தத் துறைக்குத் அன்ஃபிட்" என என்னை முடுக்கிவிட்ட காட்ஃபாதர் தியாகு. திடீர் டெட் லைன்களைச் சந்திக்கும் அதிவேகத் தொழில்.

ஒரு சட்டை ரெடியாகி வெளியே வர மொத்தம் இருபத்து நான்கு செயல்முறைகளைத் தாண்டி வர வேண்டும். எந்தக் கட்டத்தில் வேண்டுமானாலும் தவறு நடக்கலாம். இரண்டாவது பிராஸஸில் தவறு நடந்தால் பதினெட்டாவது பிராஸஸில் தான் தெரிய வரும். தவறு நடந்த பிறகு சரி செய்ய முடியாது. அத்தனையும் இழப்பு. இழப்பைத் தவிர்க்க ஒரே வழி... இரண்டாவது பிராஸஸில் தவறு நடக்கப் போகிறது என்பதை முன்னமே யூகித்து, தடுத்து நிறுத்த வேண்டும்.

ஒருமுறை என் நெஞ்சே வெடித்து விடுகிற மாதிரி ஒரு பேரிழப்பு. எனது சின்ன கவனக் குறைவால் ஏழாயிரம் மீட்டர் துணி வீணாகிவிட்டது. ஒரு மீட்டர் ஐம்பத்தாறு ரூபாய் விலை என்றால் எவ்வளவு நஷ்டம் என்று கணக்குப் போட்டுக் கொள்ளுங்கள். மிரண்டு போன என்னை, தியாகு சார் தான் சகஜமாக்கினார். அந்தத் துணியை வேறொரு பயன் பாட்டுக்கு திறமையாக விற்று விட்டார். வேலையில் சேர்ந்து ஒரு மாதம் தான் முடிந்திருந்தது. அதற்குள் இத்தனை பெரிய நஷ்டம் ஏற்படுத்திய என்னிடம் மிகப் பெரிய பொறுப்பைத் தூக்கிக் கொடுத்தார். வெளிநாட்டு இறக்குமதியாளர்களிடம் நேரடியாக வியாபாரம் பேசும் பொறுப்பு. "விலையையும் நீயே பேசு! நீ சொல்கிற விலையை அவர்களைக் கொடுக்க வைக்க வேண்டும்" என்று அதற்கான நுணுக்கங்களையும் சொல்லிக் கொடுத்தவர். "முதலில் சரவணன் என்ற அடையாளத்தை உனக்கென்று தனியாக உருவாக்கு! பணம் சம்பாதிக்கும் முன் நல்ல பெயரை சம்பாதிப்பவன்தான் சூப்பர் பிஸ்னெஸ் மேன்" என்று தொழிற்சாலை வளாகத்தில் என்னை அவர் தம்பியைப் போல தட்டி தட்டி உருவாக்கினார். வேலைக்குச் சேர்ந்து ஆறு மாத காலத்துக்குப் பிறகே நான் சிவகுமார் பையன் என்று தெரியவந்தது. அதன்பிறகு சின்னச் சின்ன சலுகைகள் கிடைத்தாலும்,



# தகர்ந்த கனவு...

அதன் பிறகு என்னிடம் அதிகம் எதிர்பார்க்க ஆரம்பித்து விட்டார்கள். இதனால் பயமும் பொறுப்பும் கூடிவிட் டது.

நன்றாக நினைவிருக்கிறது, எனது முதல் சம்பள நாள். தினசரி அம்பத்தூர் தொழிற் பேட்டைக்கு பஸ் பிடித்துப் போய் முப்பது நாட்கள் கடமை தவறாமல் வேலை செய்து நிமிர்ந்த போது, கைமேல் ஊதியம். ஆயிரத்து இருநூறு ரூபாயை ஒரு வெள்ளைக் கவரில் வைத்து, எஸ். சரவணன் என்று பெயரெழுதிக் கொடுத்தபோது அதன் கனம் இன்னும் கதகதப் பாக அப்படியே ஞாபகம் இருக்கிறது. த்ரில் லோடு சம்பளத்தை வாங்கிக் கொண்டு வீடு வந்ததும் தங்கையை அழைத்துக் கொண்டு, அப்பாவின் காரில் புறப்பட்டேன். பனகல் பார்க் அருகில் ஒரு பிரபல ஜவுளிக் கடையில் அம்மாவுக்கு ஒரு பட்டுப் புடைவை எடுத்தோம். ஆரஞ்சு நிறப் புடைவை. அதன் விலை ஆயிரத்து இருநூற்று பதினான்கு ரூபாய். தங்கை யின் ஹேண்ட் பேக்கிலிருந்து சில்லறை களையெல்லாம் எடுத்துப் பதினான்கு ரூபாயை ஒரு வழியாகத் தேற்றிக் கொடுத்து புடைவை வாங்கி கொண்டு வெளியே வந்து காரை ஸ்டார்ட் செய் தோம். கார் பார்க்கிங் கட்டணம் கொடுக்க கையில் இரண்டு ரூபாய் இல்லை. அதற்குள் அடுத்த கார் வந்து ஹாரன் அடித்ததில், விட்டால் போதும் என்று ஓடிவந்து, அம்மாவுக்கு சர்ப்ரைஸ் கொடுத்தோம். இந்த இடத்தில் கார் மெண்ட் கம்பெனியில் பெரும்பான்மை யாக வேலை செய்யும் பெண்களைப் பற்றி நான் சொல்லியே ஆகவேண்டும்.

மதிய உணவு நிரம்பிய லஞ்ச் பாக்ஸ், வேலை முடிந்து புறப்படும்போது கலைந்த தலையை வாரிக் கொள்ள ஒரு சீப்பு, ஸ்டிக்கர் பொட்டுகள், சின்னச் சின்ன பூக்கள் போட்ட கைக்குட்டை, சீசன் பஸ் பாஸ், பத்தொன்பது வயதில் தொடங்கி நாற்பது வயது வரையிலான எக்ஸ்போர்ட் பெண்களின் தோள்களில் அடைக்கலமாகும் பேக்குகளில் ஒளிந்திருக்கும் ரகசியம் இவ்வளவுதான். காலை ஐந்து மணிக்கு எழுந்து, அவசர அவசரமாய் வீட்டு வேலைகளை முடித்துவிட்டு, எட்டு மணிக்கு பஸ் ஸ்டாண்ட் வந்து, ஒன்பது மணிக்கு வழியும் வியர்வையோடு கம்பெனிக் குள் நுழையும் இவர்களுக்கு உழைப்பைத் தவிர வேறெதுவும் தெரியாது. முக்கால்வாசிப்பேர், பள்ளிப்படிப்பைப் பாதியில் விட்டுவிட்டு வேலைக்கு வந்துவிட்ட வறிய குடும் பத்தைச் சேர்ந்தவர்கள். கால் வாசிப் பேர் மெல்லவும் முடியாத, விழுங்கவும் முடியாத கீழ்த்தட்டு நடுத்தரக் குடும்பத்திலிருந்து வரு கிறவர்கள்.

கல்யாணமாகாத இளம் பெண்கள் என்றால், வரதட்சணை வாங்காமல், நம்மைக் கைபிடிக்க ஒரு கார்மெண்ட் ராஜகுமாரன் வரமாட்டானா என்ற கனவைத் தேக்கிய கண்களோடு உழைக்கும் தையல்கள் இவர்கள். ஆயிரம் ரூபாயிலிருந்து அனுபவத்தையும்



• சூப்ரவைஸர் சரவணன்...

திறமையையும் பொறுத்து, மூவாயிரம் ரூபாய்க்குள் தான் இவர்களது ஊதியம். பல பேர் கம்பெனிக்கு உள்ளேயே காதலித் துத் திருமணம் செய்து கொள் வார்கள். சின்னச் சின்ன விஷ யங்கள் கூட அவர்களைப் பெரி தாய் பாதித்து விடும். அதுவே பெரிய இழப்பு என்றால் உடைந்து உருகுலைந்து போவார்கள். ஒரு பெண் திடீரென்று ஒரு மாதம் வர மாட்டார். 'என்னாச்சு?' என்று கேட்டால், "குடிச்சுக் குடிச்சே

அப்பா இறந்துட்டாரு சார். இனிமே என்னோட சம்பளத்துல பாதியை சேமிக்கலாம். அம்மாவையும் தங்கச்சியையும் நல்லா வெச்சிக்கணும்" என்று சொல்லும்போது, நம் கண்களில் கண்ணீர் எட்டிப் பார்க்கும். ஃபேக்டரி வளாகத்தில் அவர்களுக்கு ஏதாவது பிரச்னை என்றால், என்னிடம் வந்து நம்பிக்கையோடு சொல்வார்கள். "நீங்க வேற கம்பெனிக்குப் போறதா இருந்தா சொல்லுங்க சார்! அப்படியே மொத்தமா உங்ககூட வந்துடுறோம்" என்பார்கள்.

மழை கொட்டிக் கொண்டிருக்கும் நாட்களில், பல சமயம் ஆர்டர் அத்தனை சீக்கிரம் முடியாது. இரவு பத்து பதினொரு மணி வரை கூட ஓவர் டைம் இருக்கும். அதுபோன்ற தருணங்களில் வேலை முடிந்த பிறகு அவர்களை வேன்களில் ஏற்றிச் சென்று, ஒவ்வொரு வீடாக பத்திரமாய் விட்டு விட்டு வர வேண்டும். இதற்கே இரவு இரண்டு மணி ஆகி, அதன் பிறகு ஆர்டரை லாரியில் ஏற்றி ஹார்பருக்குப் போய் கப்பல்களில் அனுப்பி விட்டு வீடு திரும்பும்போது காலை நான்கு மணி ஆகிவிட்டிருக்கும். மூன்று மணி நேரம் தூங்கி எழுந்தால், அடுத்த நாள் சுறுசுறுப்பாக விடியும்.

கார்மெண்ட் தொழில் ரத்தத்தோடு கலந்து, அதை முழு மூச்சாக காதலிக்க ஆரம்பித்த நேரத்தில் நான் பணிபுரிந்த கம்பெனியின் பல யூனிட்டுகள் விற்கப்பட்டன. அதில் ஒரு யூனிட்டை வாங்கி எனக்குள் எரிந்து கொண்டிருந்த தொழில் அதிபர் கனவுக்கு உயிர் கொடுக்கலாம் என்று முடிவெடுத்தேன். அதற்கு எண்பது லட்சம் ரூபாய் தேவைப்பட்டது. வீடு, உட்பட சொத்துக்கள் எல்லாவற்றையும் வைத்தாலும் அவ்வளவு பணத்தைப் புரட்ட முடியாது என்று புரிந்து விட்டது. அப்பாவுக்கு நான் எப்போதுமே சுமையாக இருந்ததில்லை. வங்கிக் கடன் வாங்கலாம் என்றால், முன்வைப்புப் பணமே முப்பது லட்சம் கேட்டார்கள். இந்தத் தொழிலில் லாபம் என்ற புள்ளியைத் தொட்டுப் பார்க்க, குறைந்தது ஒரு வருடம் ஆகிவிடும். அதுவரை என்னை நம்பி வாழ்க்கையை ஒப்படைக்கும் ஆயிரத்து இருநூறு பேருக்கும் நான் தான் பொறுப்பு. ஒரு இடத்தில் சின்னதாய்ச் சறுக்கினாலும் இத்தனைப் பேரின் வாழ்க்கையிலும் பெரிய அடி விழும். இருபத்து நான்கு வயதில் இத்தனை பெரிய சுமையைத் தாங்க முடியுமா? யோசித்துப் பார்த்தபோது, எனது கனவுக் கோட்டை பொலபொலவென்று சரிந்தது. எனக்கு மட்டும் ஏன் இப்படி சறுக்கிக் கொண்டே இருக்கிறது. மண்டை வெடித்து விடுகிற மாதிரி மன அழுத்தம். தூக்கம் வரவில்லை. சாப்பாடு இறங்க வில்லை. இன்னொரு பக்கம் எங்களுக்காக அப்பா ஏதேதோ படங்களில் நடித்துக் கொண்டிருந்தார். இதையும் என்னால் சகித்துக் கொள்ள முடியவில்லை.

இந்தக் குழப்பமான காலகட்டத்தில் ஒரு நாள் வீட்டிலிருந்து எனக்கு ஒரு அவசர ஃபோன். அப்பா பேசினார். "உங்கிட்ட ஒரு முக்கியமான நபர் பேசணும்னு சொல்றார், நீயே பேசு" என்று கொடுத்துவிட்டார். பேசியவர் டைரக்டர் வசந்த். "என்ன சரவணன்! செய்ய வேண்டிய வேலையை விட்டுட்டு, அங்கே என்ன பண்றே? நான் ஒரு படம் டைரக்ட் செய்றேன். மணி ரத்னம் சார் தயாரிக்கிறார். அந்தப் படத்துல நீ நடிக்கறே... ஃபேக்டரியில வந்து உன்னைப் பாக்கட்டுமா'' என்றார். "ஐயோ, அதெல்லாம் வேண்டாம்'' என்று அவசரமாக மறுத்தேன்...

(டைரியைத் தொடர்வேன்)

கா வ்யாவுக்கு ஷூட்டிங் இடைவேளையின் போது கவிதை எழுதுவதுதான் மிகப் பிடித்தமான பொழுதுபோக்கு.

படம் : ஸ்ரீஹரி



# குரு-சிஷ்யன்ஸ்!

'மெட்டி ஒலி' களைப்பு இன்னும் தீரவில்லை போலும்... தன் குடும்பத்தினருடன் ஊர் ஊராகச் சுற்றிக் கொண்டிருக்கிறார் 'குரு' திருமுருகன்.

முதல் சிஷ்யரான திருச்செல்வத்தால் 'அல்லி ராஜ்யம்' நடத்த முடியாமல் போனாலும் 'கோலங்களை' டாப்கியரில் கொண்டு செல்கிறார்.

இரண்டாவது சிஷ்யரான விக்ரமாதித்தனின் 'கெட்டிமேளம்' நூறாவது எபிசோடைத் தொட்டு, ஸ்மூத்தாகப் போய்க் கொண்டிருக்கிறது. மிகப் பெரிய நட்சத்திரங்கள் இல்லாமலே செஞ்சுரி போட்ட வைத்த விக்ரமாதித்தனுக்கு வாழ்த்து!

மூன்றாவது சிஷ்யரான முத்துச் செல்வன்தான் திணறிக் கொண்டிருக்கிறார். ஆம்... 'முகூர்த்தம்' சீரியல் 'கங்கா'வுக்கு கைமாறிவிட்டது.



# சேனல்

பிரேம்சாய் - சின்னத்திரை சூப்பர் ஸ்டார்களுள் ஒருவர். 'நசநச' வென்று எல்லா சேனல்களிலும் வராமல், 'நறுக்' என்று ஒரே சீரியலைச் செய்து அனைவர் மனதிலும் பதித்து விடுபவர்.

**டாக்டர் சத்யா**

97'ல அறிமுகமாகி, ஆச்சி இன்டர் நேஷனல், சொந்தம், நிறங்கள்னு நிறைய சீரியல்கள் பண்ணியிருந்தாலும், 'அம்மா' சீரியல்தான் எனக்கு மிகப் பெரிய ப்ரேக் கொடுத்தது... அதுல வர்ற டாக்டர் சத்யா கேரக்டர் ரொம்ப நல்ல பேரை வாங்கித் தந்தது.

**கிச்சா**

'நிலவைப் பிடிப்போம்' சீரியல்ல நான் செய்த கேரக்டர்... ரொம்ப நியாயமான, தனக்குள்ள உரிமைகளை கொஞ்சமும் விட்டுத் தராத, மத்தவங்க மேல அன்பு செலுத்தற வித்தியாசமான கேரக்டர்... நிஜத்துல நான் 'கிச்சா' மாதிரிதான்.

**திரு**

இப்போ 'என் தோழி... என் காதலி... என் மனைவி' சீரியல்ல நான் பண்ற கேரக்டர் திரு முழுக்க என்னைச் சுற்றியே பின்னப்பட்ட கதை... போகப் போக என் கேரக்டர்ல நிறையத் திருப்பங்கள் காத்திட்டு இருக்கு.

**பலம்**

சான்ஸ் வருதே, பிரைம் டைம்ல

ஸ்பாட்டுக்கு சரியான நேரத்தில் ஆஜராகி விடுவார் என்று ஷொட்டு வாங்கும் உமா அம்மணி எல்லா கேரக்டர்களிலும் ஒரே மாதிரி எக்ஸ்பிரஸன் காட்டுவதற்காக குட்டு வாங்குகிறார்!

ஸ்லாட் கிடைக்குதே, பெரிய பேனராச்சேன்னு எதையுமே ஒத்துக்காம, என்னால எதைச் செய்ய முடியுமோ அதைக் கரெக்டா செலக்ட் பண்றதுதான் என்னோட பலம்.

**சூப்பர் ஸ்டார்**

'என் தோழி...' சீரியல்ல நான், சேத்தன், வேணு மூணு பேரையும் அப்படி விளம்பரப்படுத்தினாங்க... அது வசந்த் சாரோட கணிப்பு... என்னோட எண்ணம், நான் என்னை சூப்பர் ஸ்டார்னு நினைச்சு, அதை நிரூபிக்க முயல்வதைவிட, அந்த சீரியலை இன்னும் சிறப்பா நடிச்சு சூப்பர் சீரியலா கொண்டு வரணும். அவ்ளோதான்.

# "நான் சூப்பர் ஸ்டாரா?"

**ஏவி.எம்**

'நிம்மதி உங்கள் சாய்ஸ்'ல இருந்து தொடர்ந்து பல வாய்ப்புகள் தந்து என்னை செதுக்கினவங்க ஏவி.எம். சரவணன் சாரும், எஸ்.பி.எம்மும் தான்.

**காமெடி**

எனக்கு ரொம்பப் பிடிச்ச விஷயம்... ஆனா இதுவரைக்கும் நான் தடம் பதிக்காத துறை... அதுக்காக இப்போ வந்துட்டு இருக்கற 'தினிப்பு காமெடி' சீரியல்கள்ல நடிக்க விருப்பமில்ல.

**சினிமா**

எனது கனவு... எதிர்காலம் எல்லாமே சினிமாதான். அதுக்கு இப்போ முறையா அடித்தளம் போட்டுக்கிட்டு இருக்கேன்... எனக்கு ஹீரோவுக்கு 'ஆமாம்' போடுற கேரக்டர், இல்ல மெயின் காமெடியனுக்கு சப்போர்டிங் ஆர்டிஸ்டா வர்றதுல துளிக்கூட இஷ்டமில்ல... நாலு சீன்ல வந்தாலும் மக்கள் மனசுல பதியற மாதிரி வரணும்.



- இரா. முத்துக்குமார்

படம்: முகில்

'பொலிட்டிகல் விஸிட்' அடிச்சு, ரொம்ப நாளாச்சுப்பு... அதான் இந்த வாரம் எல்லா பார்ட்டி ஆபீசுகளையும் ஒரு ரவுண்டு அடிச்சுடலாம்னு கிளம் பினேன். முதல்ல போனது 'அம்மா' கட்சி ஆபீசுக்குத்தான். ரத்தத்தின் ரத்தங்கள் ரொம்பவே தெம்பா இருக்காங்கப்பு... எந் தெந்த ஊர்ல... எப்போ மீட்டிங்கு... யாரைப் பேசக் கூப்பிடறதுனு செம பிஸி...

மெதுவா ஒரு ரத்தத்துக்கிட்ட போயி, "ஏண்ணே... இந்தத் தடவை நம்ம தனி ஆவர்த்தனம்தானேண்ணே?" - பிட்டைப் போட்டேன்... அதுக்கு அவரு, "சொல்ல முடியாதுப்பு... இப்பத்தான் கட்சிக்காரங் களை உசுப்பி விட்டுருக்காங்க அம்மா...

"முரசொலி அறக்கட்டளை நடத்துன முப்பெரும் விழாவுல தளபதிக்குத்தான் அதிக முக்கியத்துவம் இருந்துச்சல்ல... இவ்ளோ நாளு எல்லா விழாவுலயும் தயா நிதி ரொம்ப வேகமா முன்னால முன் னால நின்னாரு. ஆனா அடுத்து வர்றது சட்டமன்றத் தேர்தல்... அதனால இனி எல்லா விழாவும் தளபதியை முன்னி லைப் படுத்தித்தான் இருக்கும். அது சீக் கிரமே நடக்கப் போற மாநில மாநாட்டுல எல்லார்க்கும் பளிச்னு தெரியவரும் பாருங்க"ன்னு சொல்லிக்கிட்டே வந்தவர், "இருப்பா... தலைவரு காருக்குப் பக்கத்துல ஏகப்பட்ட கூட்டம்... தலைவரு புறப்பட றார்னு நினைக்கிறேன்"னுட்டு நகர, அந்த

# தொகுதியின் விலை

எப்படியும் இன்னும் ரெண்டு மாசத்துல குட்டையைக் குழப்பி ரெண்டு மூணு மீனுங்களை அள்ளிட்டு வந்துடுவாங்கன்னு நம்பிக்கையா இருக்கோம்... எல்லாம் அம்மா கைலதான் இருக்கு" அப்படின் னுட்டு நடையைக் கட்ட, "அண்ணே... இருங்கண்ணே... இந்த விஜயகாந்து கட்சி ஆரம்பிச்சிருக்காரே...அது தேறு மாண்ணே..."ன்னு கேட்க,

"அடடா... மெதுவா... மெதுவா பேசுப்பா... அம்மாவே இதைப் பத்தி இன்னும் வாயே திறக்கல... நாம எதுக்கு முந்திரிக்கொட்டை மாதிரி பேசிக்கிட்டு..."

'ஆஹா.... வெவரமான ஆளுப்பா'ன்னு நினைச்சுகிட்டே, நேரா அறிவாலயத்துக்கு வந்தேன்.

மகளிர் பேரணியை அடுத்து, இப்போ உடன்பிறப்புங்க ரொம்ப ஆர் வமா எதிர்பார்க்கறது, அடுத்து நடக்கப் போற தி.மு.க மாநில மாநாட்டைத்தா னாம். ஏன் அப்படின்னு அறிவாலயத் துல உலாத்திக்கிட்டு இருந்த ஒரு உடன் பிறப்புகிட்ட தூண்டில் போட்டேன்.

பார்க் பெஞ்சில் கொஞ்ச நேரம் உட் கார்ந்து ரிலாக்ஸ் பண்ணிட்டு நேரா சத்தியமூர்த்தி பவனுக்கு வந்தேன்.

வராண்டால நின்னு பேசிக்கிட்டு இருந்த கதர்க்காரங்களுக்கு நடுவுல ஒண் ணுந் தெரியாத புள்ளை மாதிரி, கையில மனு ஒண்ணை ரெடி பண்ணிட்டு நின் னேன். அன்னிக்கு திண்டிவனம் ராம மூர்த்தியார்தான் பாவம். எல்லார் பல்






# ஆறு லட்சம்!



லையும் மாட்டி தவிச்சிக்கிட்டு இருந்தாரு.

"ஏம்பா... திண்டிவனத்தாரு எதுக்குப்பா தேவைவல்லாமப் பேசி மூக்கை உடைச்சிக்கணும்?"

"எது... விடுதலைப்புலிங்களுக்கு சப்போர்ட் பண்ணினவங்ககூட கூட்டணி வைக்க வேண்டியிருக்குன்னு புலம்பினாரே, அதைச் சொல்றியா...? விநாயகமூர்த்தி மாதிரி திடுதிப்புன்னு எதுனா சவுண்டு குடுத்தா, மீடியால ஜொலிக்கலாம்னு பார்த்தாரு.. பாவம் ஒரு பருப்பும் வேகல"

"அவசரப்பட்டு வாயை வுட்டுட்டாரு.. நீ வேணா பாரு... சீக்கிரமே திண்டிவனத்தாரு கோபாலபுரம் விஸிட்டு அடிப்பாரு, பாரேன்... இதே வேலைப்பா இவங்களுக்கு"னு டயலாக் விட்டுட்டு இருந்தவங்க, 'தலைவர் வரார்'னு ஒரு சவுண்டு கிளம்ப, எல்லாருமே வாசல்பக்கம் ஓட, நானும் அப்படியே கிளம்பி தாயகத்துக்கு ஒரு விஸிட் அடிச்சேன்.

எலெக்‌ஷனுக்கு ரொம்ப வேகமா ரெடியாயிட்டு இருக்குப்பு மறுமலர்ச்சி தி.மு.க... அதுவும் எப்படி? எல்லாம் அள்ளு... அள்ளு பாணிலதான். மாநிலம் முழுக்க பத்துக் கோடி திரட்டறதுக்கு ரெடி பண்ணியிருக்காங்களாம்... தாயகத்துல நின்னு அரட்டை அடிச்சுக்கிட்டு இருந்த மூணு பேருகிட்ட பேச்சக் கொடுத்தேன்...

"கட்சிக்கு வெற்றி வாய்ப்புள்ள தொகுதிகள், வாய்ப்பற்ற தொகுதிகள்னு ரெண்டா பிரிச்சுட்டாங்க... வெற்றி வாய்ப்புள்ள தொகுதிகள்ல இருந்து வர்ற நிதியில, பாதியளவு வாய்ப்பில்லாத தொகுதியில் இருந்து வரணுமாம்"

"சரி... வெற்றி வாய்ப்பு இருந்தா எவ்ளோ தரணுமாம்...?"

"ஆறு லட்சம்னு சொல்றாங்க... பார்ப்போம், எம்புட்டு கலெக்‌ஷன் ஆவுதுன்னு..."

- ஒற்றன்

படங்கள்: கோகிலா



"எட்டிப் பாருங்கள் மகாராஜா. உள்ளே உங்களைப் போன்றே மற்றொரு சிங்கம். குரலோ உங்களைவிட அதிக சக்தி வாய்ந்தது" என்று கூறிவிட்டு சாதுர்ய முயல் அங்கிருந்து ஓடியது.

சிங்கம் கிணற்றுக்குள் எட்டிப் பார்த்தது. 'இது மற்றொரு சிங்கமல்ல. என் பிரதிபிம்பம்தான். நீர்நிலைகளில் தண்ணீர் குடிக்கும்போது எவ்வளவுமுறை பார்த்திருக்கிறோம்!'

முயலின் மீது எழுந்த கோபம் அதிகமாவதற்குள், தன் பிம்பத்தின்மீது அதன் கவனம் சென்றது.

'பிடரி அழகாகத்தான் இருக்கிறது. கண்களின் ஆக்ரோஷத்துக்கு மட்டும் என்ன குறைவாம்? வாலைத்தான் சரியாகப் பார்க்க முடியவில்லை. சும்மாவா என்னைக் காட்டுராஜா என்று அழைக்கிறார்கள்!'

பெருமிதம் மேலும் பெருக, தன்னை மேலும் நெருக்கமாகப் பார்த்துக் கொள்ள வேண்டும் என்ற வெறி அதற்குள் கிளம்பியது.

தொபீர்!

தன்னிலிருந்து சற்றே விலகியிருப்பதே நல்லது. ஆனால் அதை எவ்வளவு பேரால் அறிந்து கடைப்பிடிக்க முடிகிறது?



விலங்கியல் பூங்காவின் உணவகத்தில் சிற்றுண்டி சாப்பிட்டுக் கொண்டிருந்தனர் ராஜனும் ஆனந்தும்.

"எதுக்காக உங்க முகம் வாடி இருக்கு? வீட்டிலே அக்கா ஏதாவது திட்டினாங்களா?" குறும்பாகக் கேட்டாலும், ஆனந்தின் கேள்வியில் அக்கறையும் தென்பட்டது.

"அதெல்லாம் இல்லடா." உண்மைக் காரணத்தைக் கூற முடியாத ராஜன் சட்டென்று பேச்சை மாற்றினான். "உன்னைப் பற்றிய கவலைதான்"

"என்னைப் பற்றியா? எனக்கென்ன குறை? நல்ல வேலை. ப்ரீஃப் கேஸ் நிறைய சம்பளம். ஒவ்வொரு மாதமும் வாடகை கொடுத்தாலும் கொடுக்காட்டியும் கண்டுக்காத வீட்டு ஓனர்"

தன்னைத்தான் குறிப்பிடுகிறான்! முதல் தேதியே இல்லாவிட்டாலும், பத்து தேதிக்குள் வாடகையை சரியாகக் கொடுத்துவிடுவான். "இந்தக் காலத்திலே இருபத்தி மூணு வயதிலேயே பையனுங்களுக்குக் கல்யாணம் ஆயிடுது ஆனந்த்"

அருண் சரண்யா 4

தன் வயது இருபத்தெட்டு என்பது ஆனந்துக்கு நினைவு வந்தது. "அவங்க விஷயமே வேறண்ணா. அவனவனும் மேற்படிப்பு, வேலைன்னு வெளிநாட்டுக்குப் போயிடறான். அங்கே ஒரு வெள்ளைக்காரியையோ, கறுப்பியையோ ஜோடி சேர்த்துக்கிட்டு வந்துடுவானோன்னு, இங்க அப்பா அம்மாவுக்குக் கவலை. அதனாலே சீக்கிரமே கல்யாணத்தைப் பண்ணிடறாங்க. பசங்களும் வெளிநாட்டிலே சீப் அண்ட் பெஸ்டாக சமைத்துப் போட ஒருத்தி

# விலங்குகள்



கிடைச்சா ஓகேதானேன்னு தலையை ஆட்டிடறானுங்க. ஆனா எனக்கு அப்படி எந்த அவசரமும் இல்லையே"

ராஜன் அவனையே உற்றுப் பார்த்தான். கல்யாணப் பேச்சை எடுக்கும் ஒவ்வொரு முறையும் நழுவுகிறான். விடக் கூடாது.

''உனக்கு எந்த மாதிரி பொண்ணுடா வேணும்?''

"நிஜமாவே சொல்லட்டுமா?"

"சொல்லித் தொலையேன்."

"அக்கா மாதிரி ஒருத்திதான்."

சொல்லிவிட்டு கைகழுவச் சென்றுவிட்டான் ஆனந்த். யோசித்துப் பார்க்கும்போது ராஜனுக்கு கொஞ்சம் சிரிப்பு வந்தது. மனதில் இருப்பதை மறைக்காமல் வெளிப்படுத்தி விட்டான். அனுஷாவின் தோற்றமும், குணநலன்களும் இவனுக்குப் பிடித்திருக்கின்றன. அதேபோன்ற சாயலை தன் வருங்கால மனைவியிடம் எதிர்பார்க்கிறான்.

ஆனால் மேலோட்டமாகப் பார்க்கும்போது இது எவ்வளவு அபத்தம்! 'அக்காவைப் போன்ற மனைவி வேண்டும்'

உளவியல் தொடர்கதை

''நீங்க கடன் கேட்கத்தானே வந்திருக்கீங்க?''

''ஆமாம். எப்படிக் கண்டுபுடிச்சீங்க?''

''இவ்வளவு நேரமா அறுக்கறேன்... சகிச்சுக்கிட்டு உக்காந்திருக்கீங்களே!''

- அஜித்லால்



அப்படிப் பார்த்தால் ஆனந்த் தன்னை அண்ணா என்றும், அனுஷாவை அக்கா என்றும் அழைப்பதே வேடிக்கைதான். "டேய், எங்களிலே யாராவது ஒருத்தரை வேறே மாதிரி கூப்பிட்டுத் தொலை. நீ சொல்வதைப் பார்த்தால் அனுஷா எனக்குத் தங்கை முறை ஆகுது."

சிரித்தபடி மறுத்துவிட்டான் ஆனந்த்.

"நீங்க ரெண்டு பேருமே எனக்கு ரத்த சம்பந்தம் இல்லை. ஆனாலும் எனக்கு நீங்க அண்ணா. அனுஷாக்கா எனக்கு அக்கா. மற்றபடி உங்களுக்குள்ளே எப்படியானால் எனக்கென்ன?"

'எங்களுக்குள் எப்படி என்பது இவன் அறியாதது.' ராஜன் தனக்குள் மூழ்கத் தொடங்கினான். 'நானும் அனுஷாவும் கணவன் மனைவிதான். அப்படித்தானா? தாலி கட்டியிருக்கிறேன். எனவே அப்படித்தான். எனக்கு தினமும் அவள் சமைத்துப் போடுகிறாள். நான் சம்பாதித்துக் குடும்பத்தைக் காப்பாற்றுகிறேன். எனவே அப்படித்தான். ஒரே கூரையில் தொடர்ந்து வசிக்கிறோம். எனவே அப்படித்தான். மற்றபடி...?'

**ஸ்ரீ**லதா இல்லாமல் இருப்பது ரொம்பக் கஷ்டமாக இருந்தது. கடந்த மூன்று வருடங்களாக கல்லூரி முடிந்து மதியம் இரண்டு மணிக்கே வீடு திரும்பி விடுவாள். தொணதொணவென்று பேசிக் கொண்டிருப்பாள். "ஒரு பத்து நிமிஷம் என்னைப் புஸ்தகம் படிக்க விடுடீ" என்று இலேசாகக் கோபித்துக் கொண்டாலும் போச்சு. உர்ரென்று நகர்ந்து விடுவாள். இரண்டே நிமிடங்களில் மீண்டும் கலகலப்புடன் பேசத் தொடங்கிவிடுவாள். ஆனால் அடுத்த நாளே அனுஷா படித்துக் கொண்டிருந்த புத்தகம் மறைந்து விட்டிருக்கும்.

"ப்ளீஸ். இனிமே நீ இல்லாத போதுமட்டும்தான் கதை படிப்பேன். கொடுத்துடும்மா" என்று அனுஷா கெஞ்சியாக வேண்டும்.

''உன் புக்கைப் பற்றி எனக்கென்ன தெரியும்? நானா மறைத்து வெச்சேன்? போனாப் போகுதுன்னு தேடித் தரேன்'' என்று ஒப்புக்கு ஓரிரண்டு இடங்களில் தேடுவது போல் பாவனை செய்துவிட்டு, பிறகு தான் ஒளித்து வைத்திருந்த இடத்திலிருந்து அந்தப் புத்தகத்தை எடுத்துக் கொடுப்பாள்.

கல்லூரிப் படிப்பு முடிந்த கொஞ்ச மாதங்களிலேயே கல்யாணம் செய்து கொடுத்தாகிவிட்டது. இன்னும் இரண்டு வருடங்கள் கழித்துதான் என யோசித்து வைத்திருந்தனர். "சுதந்தரமா இன்னும் கொஞ்ச நாள் இருக்கட்டும் பாவம்'' என்று ராஜன் கூடச் சொல்லியிருந்தான். ஆனால் கார்த்திக் தானாக அணுக, திருமணம் முடிந்துவிட்டது.

'இவள் தன்னை விட்டு எப்படித்தான் இருக்கப் போகிறாளோ?' என்று தான் கவலைப்பட்டதற்கு நேரெதிராக அமைந்துவிட்டது யதார்த்தம்.

ஸ்ரீ தன் கணவனுடன் இணைந்து வாழ்கிறாள். அக்காவை நினைத்து அவள் உருகுவதாகத் தெரியவில்லை. ஆனால் அனுஷாவுக்குத்தான் தங்கை இல்லாமல் மணித்துளிகள் நகருவதாக இல்லை. ராஜனின் தோளில் சாய்ந்து கொண்டு அழ வேண்டும்போல் இருந்தது. ஆனால் அப்படி ஒரு எண்ணம் தோன்றிய அடுத்த நொடியே அவள் உடல் நடுங்கியது. மயிர்க்கால்கள் குத்திட்டு நின்றன.

யாரிடம் சொல்ல முடியும் தன் மன வேதனையை?

**ஸ்ரீ**லதாவின் கல்லூரியில் இரண்டு நாள் பிக்னிக்.

அதில் சேர்ந்து கொள்ள அவளுக்குத் தயக்கம். "இதிலெல்லாம் கலந்துக்கிட்டா தான் மனம் உற்சாகமா இருக்கும். வாழ்க்

கையிலே புது அனுபவங்களும் கிடைக்கும்" என்று அனுஷாதான் வற்புறுத்தினாள்.

ஆனால் அனுஷாவுக்கே கூட வேறு மாதிரியானதொரு புது அனுபவம் கிடைக்கவில்லை. இல்லற உறவு. திருமணம் ஆகி ஒரு வாரம் ஆகியிருந்தும், அனுஷாவும் ராஜனும் தனித்தனி அறைகளில்தான் படுத்துக் கொள்ள வேண்டிய கட்டாயம். டீன் ஏஜ் தங்கையை, அதுவும் பெற்றோரை இழந்து அக்காவே எல்லாம் என்று நினைக்கும் ஸ்ரீயை, தனியாக விட்டுச் செல்ல அனுஷா உடன்படவில்லை. ராஜனும் பெருந்தன்மையோடு புரிந்து கொண்டான்.

என்றாலும் மூன்று 'துணை இருந்தும் தனித்திருந்த இரவுகளுக்குப்' பின் "நாளைக்கு நான் லீவு போட்டுவிடப் போறேன். எப்படியும் நம்ம ஸ்ரீ காலேஜ் போயிருப்பா. ஐயா அதுக்காக இன்னிக்கே ஒரு பாக்கெட் திருநெல்வேலி அல்வா வாங்கி வந்துடப் போறேன்."

அவன் பேசத் தொடங்குகையில் வெட்கமும் ஆனந்தமுமாகக் கேட்டுக் கொண்டிருந்த அனுஷா, அவன் பேச்சை முடித்தபோது மிரண்டு போனாள்.

"அல்வாவெல்லாம் வேணாம்."

பேசிப் பார்த்தபோதுதான் விவரம் புரிந்தது. தீயில் இறந்த அன்று அவள் அப்பா தன் செல்ல மகளுக்காக அல்வா வாங்கி வந்திருக்கிறார். அதற்குப் பிறகு அல்வாவைப் பார்க்கும் போதெல்லாம் அவளுக்கு தந்தையும், தீக்கு இரையான அவர் உடலும்தான் நினைவுக்கு வருகின்றன.

ஆனால் அடுத்த நாள் இரவே பிக்னிக் கிளம்புகிறாள் என்று தெரியவர, ராஜன் விடுப்பு எடுக்கும் எண்ணத்தைக் கைவிட்டான்.

தவிர, அன்று அவனுக்கு அறுவை சிகிச்சை ஒன்று செய்ய வேண்டி இருந்ததும் ஒரு காரணம்.

**மா**லை வீட்டுக்குள் நுழைந்தவுடன் "ஸ்ரீக்கு வேண்டிய எல்லா ஐட்டம்ஸையும் மறக்காமல் பேக் பண்ணிட்டியா?" என்று கேட்டான்.

'தங்கை ஊருக்குக் கிளம்புவதில் இவருக்கு ரொம்பதான் அக்கறை' அனுஷாவுக்கும் உற்சாகமாகத்தான் இருந்தது.

அறைக்குள் அனுஷா துணிகளை மடித்து வைத்துக் கொண்டிருக்க, வெளியே ராஜனும் ஸ்ரீயும் பேசுவது கேட்டது.

"இன்னிக்கு உங்க ஜூவிலே என்ன ஸ்பெஷல்?" என்று கேட்டுக் கொண்டிருந்தாள் ஸ்ரீ. விரிவாகவும் உற்சாகத்துடனும் பதில் அளித்துக் கொண்டிருந்தான் ராஜன்.

அன்றிரவு தீராத தாகத்துடன் ராஜன் அனுஷாவை நெருங்கினான்.

ராஜன் தங்கையுடன் பேசிய பேச்சு நினைவுக்கு வந்தது.

"அதுவா ஸ்ரீ? ஒரு மலைப்பாம்புக்கு ஆபரேஷன் செய்யும்படி ஆயிடுச்சு. மலைப்பாம்பு ஒண்ணு கொஞ்ச நாளாக சாப்பிடாமல் இருந்தது. அதன் தோல் பகுதி ஆங்காங்கே உரிஞ்சுக்கிட்டிருந்தது. ஆரோக்கியமான பாம்புன்னா அதன் சட்டை முழுமையாகத்தான் உரியும். ஆனால் இந்த மலைப்பாம்பின் உடம்பிலே சில கட்டிகள் இருந்ததாலே, பகுதி பகுதியாக தோலுரிந்து கொண்டிருந்தது. தவிர அதன் வயிற்றிலே எப்படியோ ஒரு கல். அதை ஆபரேஷன் செய்துதான் எடுக்க வேண்டி வந்தது."

இந்தக் கைகள் அன்று மலைப்பாம்பின் உடலைக் கையாண்டவை. நான் என்ன மலைப்பாம்பா?

"இப்ப வேணாமே" என்றபடி ஒதுங்கினாள் அனுஷா.

(தொடரும்)



"நான் இதுவரைக்கும் உங்களுக்காகவே வாழ்ந்துட்டேன். கொஞ்சம் 'எனக்காகவும்' வாழ வேண்டாமா...? ஆகவே, எனக்கு வாக்களியுங்கள்."
- ஆர். சுந்தரராஜன்



# மடகாஸ்கர் சொல்லும் செய்தி என்ன?

—கவர் ஸ்டோரி

## 1000/- ரூபாய் பரிசுப் போட்டி

# கிறிஸ்துமஸ் தாத்தா!

—பரிசுக் கதை





# கார் ரேஸ்

—சுவாரசியமான விளையாட்டு

## ரஷ்யா – போவோமா புது உலகம்!

இன்றே உங்கள் குழந்தைகளுக்கு
கோகுலம் வாங்கிக் கொடுங்கள்!


அக்டோபர் 2005

# கோகுலம்

ரூ.6/-

குழந்தைகளின் குதூகலம்!

# எதிர் கட்சிகளே பாராட்டும் எம்.எல்.ஏ!

• மீட்கப்பட்ட குன்னவயல் கல்குவாரி கொத்தடிமைகள்

புதுக்கோட்டை நகருக்குள் திரும்பிய பக்கமெல்லாம் கண்ணில் படுகின்றன மினி குடிநீர்த் தொட்டிகள். தொகுதியின் சட்டமன்ற உறுப்பினரான டாக்டர் சி. விஜயபாஸ்கர் பெரும் முயற்சியில் பெற்று வந்தவை அவை என புதுக்கோட்டைவாசிகள் சத்தியமே செய்கிறார்கள்.

கிராம ஊராட்சிகளுக்கு மட்டுமே மினி குடிநீர்த் தொட்டிகள் வழங்கப்பட்டு வந்தன; நகராட்சிகளுக்கு அனுமதிக்கப்படுவதில்லை என்று முதலில் மறுக்கப்பட்டுள்ளது. குடிநீர் விஷயத்தில் ஊராட்சி என்ன? நகராட்சி என்ன? என்று எடுத்துக் கூறி போராடி, வாங்கித் தந்திருக்கிறார் புதுக்கோட்டை அதிமுக சட்டமன்ற உறுப்பினர் டாக்டர் சி. விஜயபாஸ்கர். வயது முப்பத்து இரண்டு.

அரசு பொதுமருத்துவமனை ஓர் இடத்திலும், அரசு மகப்பேறு மருத்துவமனை இன்னொரு இடத்திலும் சிறப்பாக செயல்பட்டு வருகின்றன. இரண்டு மருத்துவமனைகளையும் சுற்றிப் பார்த்ததில்அத்தனை சுத்தம். மூன்று ஆண்டுகளுக்கு முன்பாக ஒரு கோடி ரூபாய்க்கும் மேலான திட்டத்தில் சி.டி ஸ்கேன் மையம் ஒன்று இங்கு நிறுவப்பட்டுள்ளது.

அரசு பொதுமருத்துவமனைகளில் ஐந்தாறு புதிய கட்டில்கள், மெத்தைகள், போர்வைகள் போன்றவற்றைப் பெற்றுத் தந்திருக்கிறார் எம்.எல்.ஏ. விஜயபாஸ்கர். தமிழ்நாட்டிலேயே சென்னைக்கு அடுத்தபடியாக அரசு மகப்பேறு சிகிச்சையில், தஞ்சை அரசு இராணியார் மகப்பேறு மருத்துவமனை இரண்டாமிடத்தில் இருந்து வருவதாகச் சொல்லப்படுகிறது.

"அறந்தாங்கி, அரசர்குளத்துலேந்து அறுபது கி.மீ தள்ளி



• சி. விஜயபாஸ்கர் எம்.எல்.ஏ

புதுக்கோட்டை ஆஸ்பத்திரில வந்து என்னோட தங்கச்சியை பிரசவத்துக்குச் சேர்த்திருந்தேன். இது அவளோட இரண்டாவது பெண் குழந்தை. குடும்பக்கட்டுப்பாடு ஆபரேஷன் ஆகி இப்ப அவ பெட்ல இருக்கா. எங்க சுற்றுவட்டாரப் பகுதி மக்களுக்கு இங்கே வந்து சேர்த்துவுட்டா நல்லபடியா பிரசவம் ஆயிடும்னு ஒரு நம்பிக்கை. அப்புறமா இங்கே டாக்டருங்க நர்சுங்க எல்லாம் முகஞ்சுளிக்காம நல்லபடியா பாத்துக்குறாங்க. அதனாலத்தான் அவ்வளவு தூரத்துலேந்து எல்லாரும் பிரசவத்துக்கு இங்கே வந்து சேர்ந்துக்கறாங்க!'' என்கிறார் கே. சாரதா.

புதிய நவீனமயமாக்கப்பட்ட குடிநீர்த் தொட்டிகள் பளிச்சிடுகின்றன. பைப் ஒன்றினைத் திருகி, கையை நீட்டுகிறோம். அட... அந்தத் தண்ணீர் சுடுகிறது! அரசு ஆஸ்பத்திரியில் வெந்நீர்!

"தமிழ்நாட்டுல அரசு ஆஸ்பத்திரிகள்ல இங்க இருக்கறாப்ல சுடுதண்ணி குழாய் வசதி வேறு எங்குமே இல்லைன்னு சொல்லிக்கிறாங்க!'' என்கிறார் புதுக்கோட்டை கற்பகவல்லி.

குன்னவயல். புதுக்கோட்டையிலிருந்து மூன்று கி.மீ தூரத்தில் கல்மலைகள் மீதிருக்கும் கிராமம். நூற்றியிருபது குடும்பங்கள். அவற்றுக்குக் குடிநீர் இரண்டு மூன்று கி.மீ தூரம் நடந்து போய்த்தான் கொண்டு வர வேண்டும். அத்தனை பேரும் கல் குவாரித் தொழிலாளர்கள். குன்னவயல் கிராமத்துக்கு மேலேயே குடிநீர் வசதி கொண்டு வர வேண்டும் என்பது அவர்களது பல்லாண்டு கோரிக்கை. அந்தப் பகுதி முழுவதும் கற்பாறைகள். அதனால் அங்கு எங்குமே குடிநீருக்கென்று போர் போட முடியாது.

"அதனால மலைச்சுப் போகலை எங்க எம்.எல்.ஏ., திருச்சி ரோட்டுல ஹைவேஸ் ஆபீஸ் பக்கத்துல ஆழ்குழாய்க் கிணறு அமைச்சு, அங்கேயிருந்து இரும்புக் குழாய் மூலமாக குடிநீரை மூணு கி.மீ தூரத்துக்குக் கொண்டு வந்து, குன்னவயல் கிராமத்து சனங்களோட குடிநீர்ப் பிரச்னையைத் தீர்த்து வைச்சிருக்காரு'' எனக் கூறுகிறார் மாரிக்கண்ணு.

"பல கிராமங்களுக்குத் துவக்கப் பள்ளிகளைக் கொண்டு வந்தார். முப்பதுக்கும் மேற்பட்ட கிராமங்களில் புதிய துவக்கப்பள்ளிகள். நாற்பதுபள்ளிகள் நடுநிலைப் பள்ளிகளாக உயர்வு. நான்கு பள்ளிகள் உயர்நிலைப் பள்ளிகளாக தகுதி உயர்வு. இரண்டு பள்ளிகள் மேனிலைப் பள்ளிகளாக உயர்வு. புதிதாக பள்ளிகள் உருவாக்குவதிலும் பள்ளிகளின் தரத்தினை உயர்த்துவதிலும் இதுவரை இருந்த சட்டமன்ற உறுப்பினர்களைக் காட்டிலும், இவர் மிகவும் அதிக அக்கறை எடுத்துச் செயல்பட்டு வருகிறார்'' என்கிறார் அண்டக்குளம் அரசு மேனிலைப் பள்ளி பெற்றோர் ஆசிரியர் கழகத் தலைவர் எம்.எஸ். முகமது மைதீன்.


• சிங்காரம்


• மைதீன்


• ராஜசேகரன்

சாலை வசதிகள் தொகுதி முழுவதுமாக விரிவு செய்யப்பட்டுள்ளது. "வடவாளம் - புதுப்பட்டி சாலை பல வருடங்களாக பள்ளம் மேடுகளாத்தான் இருந்திச்சு. இப்ப புதுசா தார் ரோடு வந்தாச்சு! ஒரே சமயத்தில் இரண்டு பஸ்சுங்க தாராளமாப் போய்ட்டு வருது!'' என்கிறார் வாடிமனைப்பட்டி கிராமவாசி என்.ஆர். சிங்காரம்.

"எங்க சந்தனேரிப்பட்டி கிராமம் புதுக்கோட்டையிலேந்து 26 கி.மீ தூரத்தில் இருக்கு. எல்லாமே சந்தனேரிப்பட்டியிலேந்து மூணு கி.மீ தூரம் நடந்து போய் புலவன்காடு என்கிற கிராமத்து ரேஷன் கடையிலதான் சாமான்கள் வாங்கிட்டு இருந்தாங்க. எம்.எல்.ஏ ஆபீசுல போய் மனு கொடுத்திட்டு வந்தோம். இப்ப எங்க ஊருக்கே பகுதி நேர ரேஷன் கடை ஒண்ணு

கொண்டு வந்துட்டாரு'' என்கிறார் சுந்தனேரிப்பட்டி ரெங்கம்மாள்.

**வி**ஜயபாஸ்கரைப் பற்றி, தொகுதியிலுள்ள இதர அரசியல்வாதிகள் என்ன சொல்கிறார்கள்...?

**சொல்லருவி மு. முத்துசீனிவாசன், தலைவர், புதுக்கோட்டை இலக்கியப் பேரவை:**

"சட்டமன்றத் தேர்தலில் இவர் வெற்றி பெற்று வந்தபோது இத்தனை இளம் வயதில் (அப்போது வயது 28), இவர் தொகுதிக்கு என்ன செய்துவிடப் போகிறார் என்றுதான் நினைச்சோம்! எதிர்கட்சியினர்கூட குறைகள் சொல்லாத அளவுக்குத் தொகுதி வளர்ச்சிப் பணிகளைத் தொய்வின்றி செய்து வருகிறார்"

**எஸ். ராஜசேகரன், புதுக்கோட்டை மாவட்ட செயலாளர், இந்திய கம்யூனிஸ்ட் கட்சி:**

''எங்களைப் பொறுத்தவரை அ.தி.மு.க அரசின் பல நடவடிக்கைகள் ஏற்புடையதல்ல. ஆனால் இந்தத் தொகுதி சட்டமன்ற உறுப்பினர் சிறப்பாக செயல்பட்டு வருவதால், அரசியல் சாயமின்றி அவரைப் பாராட்டி வருகிறோம்."



* கலியமூர்த்தி



* சொல்லருவி

**கே. கலியமூர்த்தி, எம். குளவாய்ப்பட்டி ஊராட்சி மன்றத் தலைவர், புதுக்கோட்டை மாவட்ட பொருளாளர், ம.தி.மு.க:**

"எனது வேண்டுகோளை ஏற்று, குளவாய்ப்பட்டி கிராமத்துக்கு உடனடியாகப் பேருந்து வசதி செய்து தந்தார். மாத்தூர் அரசு உயர்நிலைப் பள்ளிக்கு, தொகுதி சட்டமன்ற உறுப்பினர் நிதியிலிருந்து புதிதாக வகுப்பறைக் கட்டடங்கள் கட்டித் தந்தார். அதன் பின்னர் அதே உயர்நிலைப் பள்ளியை, மேனிலைப் பள்ளியாக உயர்த்தவும் உதவினார்.



* சாரதா



* கற்பகவல்லி

"இவர் ம.தி.மு.க.காரர். இவர் கேட்பதை நாம் செய்து தரக் கூடாது!'' என்று எம்.எல்.ஏ. விஜயபாஸ்கர் எப்போதும் நினைப்பதில்லை. நானும், அவர் எங்கள் பகுதி மக்களுக்கு நல்லவை செய்யும் போது அவரை ஒரு அ.தி.மு.க காரராகப் பார்ப்பதில்லை. எங்களுக்குக் கிடைத்திருக்கும் ஒரு நல்ல சட்டமன்ற உறுப்பினராகவே கருதி அவரைப் பாராட்டுகிறேன்!"

இப்படி மாற்றான் தோட்டத்திலிருந்தும் பாராட்டுகளை அள்ள விஜயபாஸ்கருக்கு அவர் வகித்த மாநில மாணவரணி செயலாளர் பதவியும் நிச்சயம் கைகொடுத்திருக்கும் என நம்பலாம். எம்.எல்.ஏ தவிர வேறெந்த பதவியையும் இல்லாத மற்ற 'புதுமுக' எம்.எல்.ஏக்கள் எப்படி தொகுதியை வைத்திருக்கிறார்கள் என்பது வரும் வாரங்களில்...!

கட்டுரை, படங்கள்:

**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

* ரெங்கம்மாள்

"இன்றைக்கு ப்ளேடு ப்ரொபசர் வந்து என்ன ரம்பம் போடுவாரோ?" என்பது போன்ற பயங்களெல்லாம் அறவே அற்றுப்போய், எதில் தடாவையும் பொடாவையும் அமல்படுத்தப் போகிறார்களோ என்று லாரி பின்டயரில் மாட்டிக்கொண்ட எலுமிச்சம் பழமாய் விழி பிதுங்கி நிற்கிறது மாணவக் கூட்டம். 'கண்ணுங்களா இப்படியும் சொல்வாங்க...' என்று நம்மால் முடிந்த சிறு எச்சரிக்கை மணி.

- மார்னிங் நைன் டு ஈவ்னிங் சிக்ஸ், கல்லூரி வளாகத்துக்குள் ஆணும் பெண்ணும் 'டாக் டைமி'ல் ஈடுபடக் கூடாது. அனைத்து மாணவர்களும் அவர்களின் குரோட்டன்களிடம் 'கா' விட்டுவிட வேண்டும். அவர்கள் கிழக்கே நடந்தால், முதுகு காண்பித்து மேற்கே நடக்க வேண்டும்.

- கேம்பஸ் இன்டர்வியூவில் ஆங்கில அறிவைத்தான் டார்ச் அடித்துப் பார்க்கிறார்கள். ஆக, இனி, மச்சான், மாப்ளே, பங்காளி போன்ற டமில் வார்த்தைகளுக்குத் தடா. டேய் அங்கிள், டேய் சன் இன்லா என்றுதான் அடித்து... ஸாரி, அழைத்துக்கொள்ள வேண்டும்.

- நாளைலேர்ந்து மாணவர்களை



# இளமை கல்கி

# ஜோரான ஜோடி!

சில விஷயங்களைச் சிலவற்றால் மட்டும்தான் பண்ண முடியும். அப்படித்தான் 'உம்மா'வும்! உதடு இல்லாம 'உம்மா'வைச் சும்மாகூட நெனைச்சுப் பார்க்க முடியாது. உதடு இல்லாத முகத்தை கற்பனை பண்ணிப் பாருங்க! அய்யே...!

ஓ.கே. இப்ப உங்க ரசனைக்கு ஒரு ஜோராண ஜோடி! அபிஜித் சாவந்த், அபிஷேக்பச்சன், டினோ மொரியா, ஜான் ஆபிரகாம், லியாண்டர் பயஸ், ராகுல் டிராவிட், ரித்தீஷ் தேஷ்முக், சல்மான்கான், ஷா, ஹ்ரித்கபூர், ஷாருக் கான் - இந்த ஆண்களை மனசுல வைச்சுக்கோங்க!



இப்ப பெண்கள் லிஸ்ட்!

ஐஸ்வர்யாராய், கரீனா கபூர், கத்ரீனா கய்ஃப், மல்லிகா அரோரா, நஃபிசா அலி, பிரியங்கா காந்தி, ரேகா, சானியா மிர்சா,



# இப்படியும் சொல்வாங்க!

அவர்களுடைய அப்பா - அம்மாதான் கண்டு விரல் பிடித்து காலேஜுக்குப் கொண்டு வந்துவிட வேண்டும். மரங்களைப் பாதுகாப்பது நம் கடமை. காகிதங்களைத் தவிர்ப்போம். ஸ்லேட்டு, பலப்பம் நடைமுறைக்குக் கொண்டு வரப்படுகிறது. கவனம், ஸ்லேட்டை எச்சில் தொட்டு அழிக்கக் கூடாது; பலப்பத்தை விழுங்கக்கூடாது.

- ஆண்களுக்கு ட்ரெஸ் கோடு இல்லையா என்று மாணவிகள் கேள்வியெழுப்புகிறார்கள். இனிமேல் மாணவர்கள் அணில் முதுகில் உள்ளது போல் பட்டையாகக் கோடு போட்ட செக்ட் ஷர்ட்ஸ்தான் அணிய வேண்டும். ஓகேயா கேர்ள்ஸ்!
- திறந்தவெளி பல்கலைகழகத்தில் படிக்கும் மாணவர்கள் தினமும் கல்லூரிக்கு வர வேண்டும்.
- செல்போனைத்தான் கல்லூரி வளாகத்துக்குள் கொண்டு வரக் கூடாது. மற்றபடி மாணவச் செல்வங்கள் வீட்டிலிருந்து லேண்ட்லைன் போனை தாராளமாகக் கொண்டு வரலாம்.

- சநகன்



ஷோபா டே, சுஷ்மிதா சென்.

ஓகே. மேற்கூறிய ஆண்கள், பெண்கள் பட்டியல்ல உங்க பார்வையில மிக அழகான உதடுகளைக் கொண்ட ஆண் / பெண் யாரு? கண்டிப்பா 'யாருமே இல்லை'ன்னு உதட்டைப் பிதுக்க மாட்டீங்க! உதடுகளைப் பாதுகாக்கும் / அழகுபடுத்தும் பொருள்களைத் தயாரிக்கும் நிறுவனமான பிலிஸ்டெக், 'இந்தியாவின் மிக அழகான உதடுகள் - 2005' என்கிற போட்டியை நடத்துகிறது. நீங்களும் இந்த உன்னதப் பணிக்கு வோட்டளிக்க ஆர்வமா இருக்கீங்களா! 8888-க்கு எஸ்.எம்.எஸ். பண்ணுங்க. விவரமா தெரிஞ்சுக்க 'இண்டியா டைம்ஸ்' தளத்துக்குப் போகலாம். 'தறி கெட்டுப் பொய் சொல்லாத, சிகரெட்டை லைக் பண்ணாத எல்லா உதடுகளுமே அழகான உதடுகள்தான்!"

ஹேறு... யாருப்பா அது, புதுசா தத்துவம் பேசறது!

- முகில்



**ல**ண்டனில் சமீபத்தில் ஜூ-டே (Zoo Day) கொண்டாடினார்கள். சற்று வித்தியாசமாக! சிங்கம், புலி, நீர் யானை எல்லாவற்றிற்கும் விடுமுறை கொடுத்து வீட்டுக்கு அனுப்பிவிட்டு ஒரு இளைஞ-இளைஞி பட்டாளத்தைக் கூண்டுக்குள் நிற்க வைத்துவிட்டார்கள். அதுவும் எப்படி? பீட்டர் இங்லேண்ட், ரேபான் கண்ணாடி, மொபைல் ஃபோன் எதுவும் கிடையாது. இலைகள், தழைகள் (இரண்டும் ஒன்றுதானா?) இணைத்து தைத்த ஆயத்த ஆடைகளில்!

ஒருநாள் முழுக்க முழுக்க இவர்கள் தங்கியிருந்தது கரடிகள் உலாத்தும் பகுதியில். போரடித்தால் விளையாடுவதற்கு கையோடு சீட்டுக்கட்டு எல்லாம் எடுத்துப் போயிருந்தாலும் விளையாடுவதற்கு நேரம் கிடைக்கவில்லை. பார்வையாளர்களின் உற்சாகக் கூச்சல் வேறு. "ஹை எவ்ளோ நல்லாயிருக்கார் அந்த கரடி மாமா" என்று கத்தும் குழந்தைகளைப் பிடித்து இழுத்து "அப்படியெல்லாம் சொல்லக் கூடாது. அது கரடி மாமா கிடையாது" என்று சீரியஸாக சமாதானம் சொல்லிக் கொண்டிருந்தனர் பெற்றோர்கள்.

# இளமை கல்கி

## மடிச்சு...வடிச்சு!

**செ**ன்ற வாரம் நுங்கம்பாக்கம் லேண்ட் மார்க்கனைகட்டி இருந்தது... உள்ளே சென்று பார்த்தால் ஓர் இளைஞர் கையை பின்புறம் கட்டிக் கொண்டு, கூட்டத்தைப் பார்த்து புன்னகை செய்து கொண்டிருந்தார். என்னதான் செய்கிறார்... என்று பார்த்தால் மனிதர் ஒரு கலர் பேப்பரை விதவிதமாக மடித்துக் கொண்டிருந்தார். இடையென்று பார்த்தால் கையில் ஓர் அழகிய வண்ணத்துப் பூச்சி..!

"ஹேய்... இது மேஜிக்லாம் இல்ல... இந்த ஆர்ட்டுக்கு பேரு ஓரிகாமி . அதாவது ஒரு பேப்பரை வெட்டாமல், ஒட்டாமல் எந்தவொரு வடிவத்தையும் கொண்டு வர்ற டெக்னிக்" என்று சிரிக்கிறார் ஷிவ்ராம் நாராயணன்.

"எனக்கு அஞ்சு வயசு இருக்கும்போது இது பத்தின புக் ஒண்ணை அம்மா தந்தாங்க. அதைப் பார்த்து இந்த ஆர்ட்டை பழகினேன். அதுக்கப்புறம் நானே யானை, பூனை மாதிரியான வெவ்வேறு வடிவங்களை உருவாக்க ஆரம்பிச்சேன். ஒன்பது வயசுல என்னோட மாடல்லை எல்லாம் வைச்சு ஒரு எக்ஸிபிஷன் நடத்தினேன்...' ஆக்சுவலா இது ஒரு ஜப்பான் ஆர்ட்.... ஆனா இதுக்கு யு.எஸ்ல நல்ல வரவேற்பு" என்று சொல்லும் ஷிவ்ராம் ஒருமுறை பேப்பரால் சிப்ஸ் செய்து எக்ஸி





# ஜாலியா ஒரு ஜூ-டே!

"அச்சச்சோ! பாவம்பா இவ்ளோ நாளா அனிமல்ஸ் எல்லாம் எப்படிதான் உள்ளே தனியா இருந்துச்சோ?" என்று உச்சுக் கொட்டுகிறார்கள். சிங்கமும் கரடியும் படும் சிரமங்கள் இப்பொழுது தான் அவர்களுக்குத் தெரிந்திருக்கிறது. கூட்டுக்கு வெளியேயிருந்து ஒவ்வொரு பிராணியையும் மெகா சீரியல் பார்ப்பது போல கண்கொட்டாமல் உற்று உற்று பார்க்கும்போது அது எந்த அளவிற்கு தர்மசங்கடமாக இருந்திருக்கும் என்பதையும் அனுபவபூர்வமாக உணர்ந்திருக்கிறார்கள்.

'விலங்குகளுக்கு உணவு கொடுக்க வேண்டாம்' என்று கொட்டைக் கொட்டையாக எழுதி வைத்தாலும் ரொட்டி, வடகறி, அப்பளம் என்று சிங்கத்துக்கு திண்பண்டங்களை தூக்கிப் போடுபவர்களை லண்டன் மனிதக்காட்சி சாலைக்கு அனுப்பி சீனியர் சிங்கத்துடன் சிங்கிள் பெட்ரூமில் இரண்டு நாட்கள் தூக்கிப் போட வேண்டும். அதேபோல் சும்மா இருக்கும் சிம்பன்ஸியிடம் சென்று 'ஈஈஈ' காட்டு, 'ஓஓ' போடு, 'பாபா ப்ளாக்ஷீப் சொல்லு' என்று அப்பிராணியை பாடுபடுத்துபவர்களை நான்கு நாட்கள் பல் வலி உள்ள கரடிக்கு பக்கத்து கூண்டில் கட்டிப் போட வேண்டும்.

- மருதன்





பிஷனில் வைத்திருந்தாராம். அங்கு வந்த ஒருவர் அதை நிஜ சிப்ஸ் என்று நினைத்து வாயில் போட்டுவிட, அதைக் கண்ட இவரது தந்தை ஓடிச் சென்று விஷயத்தைச் சொன்னாராம். ஆனால் அதற்குள் சிப்ஸ் வயிற்றுக்குள் சேர்ந்து விட்டதாம். இதுதான் எனது திறமைக்குக் கிடைத்த மிகப்பெரிய வெற்றி என்கிறார்.

சரி, இங்கு எதற்கு வந்தாராம்?

"ஆங்... அதைச் சொல்லலியே... இந்த ஓரிகாமி ஆர்ட் மூலமா எந்த வடிவத்தை எப்படிக் கொண்டு வர்றதுன்னு ஒரு புத்தகம் எழுதியிருக்கேன்... அதை இங்கே அறிமுகப்படுத்தியிருக்கேன். இதுவரைக்கும் ஓரிகாமி பற்றிய புத்தகம் இந்தியாவுல எழுதப்படல... இதுதான் முதன்முறை. இதற்குப் பேரு 'Fold in - Fold out'. இது மிகப்பெரிய கலை. அதை இந்தியாவுல இருக்குற ஒவ்வொருத்தரும் கத்துக்கணும். அதுக்கு என் புத்தகம் உதவணும்" என்கிறார் இந்த பதினாறு வயது கலை நிபுணர்!

- முத்து
படம்: முகில்

# சக்சஸ் ஸ்டோரி

**ஆயிரத்துக்கும் அதிகமான ஊழியர்கள், அறுபத்தைந்து கோடிக்கும் அதிகமான டர்ன் ஓவர்... 'அப்பாசாமி ரியல் எஸ்டேட்'டின் இந்த சாதனைகளெல்லாம் பூஜ்ஜியத்திலிருந்து தொடங்கப்பட்டதுதான்.**



• அப்பாசாமி, ரவி அப்பாசாமி

"**நா**ன் மாயவரத்தில் 1933ம் வருடம், பிறந்தேன். அப்பா கிராமத்து முனிசீப். மிகச் சாதாரண நடுத்தர வர்க்க குடும்பம்தான். படிப்பை முடித்தபிறகு ரயில்வேயில் பணிபுரியும் சந்தர்ப்பம் கிடைத்தது. ஆனாலும் என் நாட்டமெல்லாம் வியாபாரத்தின் மீதே இருந்தது. 1961ல் ரியல் எஸ்டேட் பிஸினஸில் தைரியமாக தன்னந்தனியாக இறங்கினேன். எனக்கு பின்புலமும் இல்லை; வழிகாட்டியும் இல்லை; அனுபவம் தான் எல்லாவற்றையும் கற்றுக் கொடுத்தது.

முதன் முதலாக தாம்பரம் பெருங்களத்தூரில் வீட்டு மனைகளை விற்க ஆரம்பித்தேன். 1950களில் ஏராளமான காலி மனைகள் இருந்தன. ஆனால் மக்களிடம் பணம் இல்லை. 1960க்குப் பிறகுதான் ரியல் எஸ்டேட் பிஸினஸ் மெள்ள துளிர்விட ஆரம்பித்தது. அப்போது ஒரு கிரவுண்டின் விலை 150 ரூபாய்!

1976ல் அரசாங்கம் அர்பன் சீலிங் ஆக்ட் அமைத்து, ஒருவர் கைவசம் ஒன்பது கிரவுண்டுக்குமேல் வைத்திருக்கக் கூடாது என்று சட்டம் போட்டது. இப்படியொரு சட்டம் போட்டால் எப்படி ரியல் எஸ்டேட் பிஸினஸ் பண்ண முடியும்? (கிட்டத்தட்ட 25 வருட எதிர்ப்புகளுக்குப் பின்னர் சமீபத்தில்தான் இந்த விதி தளர்த்தப்பட்டது!)

இந்த சீலிங் ஆக்ட் அமல்படுத்துவதற்கு முன் பொதுவாக நான் முப்பது நாற்பது



# "பூஜ்ஜியத்திலிருந்து கோடிகள் வரை!"

ஏக்கர்களில்தான் மனைகளை விற்று வந்தேன். இந்தத் தொழிலில் விசாலப்பார்வை நிச்சயம் அவசியம். இந்த இடம் இத்தனை வருடங்களுக்குப் பிறகு செழிப்படையும் என்று தீர்க்கதரிசி போல் கணக்கிட்டுச் செயல்பட வேண்டும். சென்னையிலும் அதன் புறநகர்ப் பகுதிகளிலும் மனைகளை விற்று வந்த நான் 1972-ல் பல்லாவரம், பம்மல் அருகிலுள்ள சங்கர் நகர் எனும் பகுதியில் 112 ஏக்கர் நிலத்தை ஃப்ளாட் போட்டு விற்றேன். அப்போது பாம்புகளும் புதர்களுமாய் வனப்பிரதேசமாக அப்பகுதி காட்சி அளிக்கும். சர்வே பண்ணவே முடியாது. ஆனால் இன்றைக்கு? ஒரு மாடல் டவுன்ஷிப்பை உருவாக்கித் தந்த பெருமையை பெற்றிருக்கிறேன். இந்த சந்தோஷத்தில் அங்கு ஆஞ்சநேயர் கோயில் எழுப்பி சமீபத்தில் அதற்குக் கும்பாபிஷேகம் பண்ணி யுள்ளேன். மனநிறைவு தந்த செயல் இது.

ரியல் எஸ்டேட்டில் எங்களின் கை ஓங்கியபிறகு அப்படியே கட்டுமானத் தொழிலிலும் ஈடுபடுத்திக் கொண்டோம். மளமளவென்று இருபத்தைந்து வருடங்கள் ஓடி விட்டன. இதுவரைக்கும் ரியல் எஸ்டேட் பிஸினஸில் 300 ஏக்கர் நிலத்தை விற்றோம் என்றால் 3 மில்லியன் சதுர அடி மொத்த அளவு கொண்ட ஃப்ளாட்களை

## மெடிக்கல் மூலை!

தீ விபத்துகளால் பாதிக்கப்படுபவர்களின் சருமத்தைச் சீரமைப்பதற்கு ஸ்ப்ரே - ஆன் - ஸ்கின் எனும் நவீன சிகிச்சை முறையை இங்கிலாந்தில் அறிமுகப்படுத்தியிருக்கிறார்கள். இதன்படி ஆரோக்கியமான சரும சாம்பிளை நன்றாகப் பதப்படுத்தி தீயில் பொசுங்கிய சரும திசுக்கள் மீது தூவினால் புதிய சருமம் உருவாகிவிடும்.



விற்றிருக்கிறோம்.

அப்பாசாமி ரியல் எஸ்டேட் அடுக்கு மாடி கட்டடம் கட்டுகிறார்கள் என்கிற தகவல் கிடைத்தால் போதும் மக்கள் கண்ணை மூடிக் கொண்டு வாங்கி விடுகிறார்கள். சமீபத்தில் அடையாரில் 35 கோடி செலவில் நூற்று இருபது ஃப்ளாட்கள் விற்க இருப்பதாக 'தி ஹிந்து'வில் ஒரேயொரு விளம்பரம் செய்தோம். மறுநாளே அத்தனையும் விற்று விட்டது. திட்டமிட்டிருந்த அடுத்த விளம்பரத்தை உடனடியாக நிறுத்திவிட்டோம்.

மக்களின் வாழ்க்கைத் தரம் இன்று மிகவும் உயர்ந்து விட்டது. முன்பெல்லாம் தரையில் மொசைக் போடுவதற்கே யோசிப்பார்கள். இன்று 500 சதுர அடி வீட்டுக்கே மார்பிள், கிரானைட் என்று அசத்துகிறார்கள்.

நட்சத்திர ஹோட்டல் துறையிலும் 'அப்பாசாமி' நிறுவனம் நுழைந்து பெருமளவு வளர்ச்சி கண்டது. 80களின் இறுதியில் சென்னையில் ஏராளமான நட்சத்திர ஹோட்டல்கள் தொடங்கப்பட்டாலும் நடுத்தர பிஸினஸ்மேன்களால் சுலபத்தில் நெருங்க முடியாதிருந்தது. இக்குறையைப் போக்க, 1991ல் 112 அறைகள் கொண்ட 'ரெசிடென்சி' நட்சத்திர ஹோட்டல் எட்டுக் கோடியில் தொடங்கப்பட்டது. அதன்பின் கோயம்புத்தூரிலும் 'ரெசிடென்சி' மூன்று நட்சத்திர ஹோட்டல், முப்பது கோடி செலவில் உருவாக்கப்பட்டது. எகானமி ஹோட்டல்களில் ட்ரெண்ட்செட்டராக விளங்கியதால் 94முதல் 96வரை தொடர்ந்து மூன்று வருடங்கள் 'சிறந்த எகானமி ஹோட்டல்' விருதை பெற்றோம். தற்போது சென்னை தி.நகரில் 50 கோடி செலவில் 'ரெசிடென்சி டவர்ஸ்' என்கிற நான்கு நட்சத்திர ஹோட்டலை உருவாக்கி, சென்னையில் அதிகரித்து வரும் வெளிநாட்டுப் பயணிகளின் தேவையைப் பூர்த்தி செய்கிறோம்.

காலமாற்றத்துக்கேற்ப பழைய மகாபாலிபுரம் சாலையில் நூற்று ஐம்பது கோடி செலவில் இரண்டு ஐ.டி.பார்க்குகளைக் கட்டி வருகிறோம். தம் 17 வயதிலிருந்தே என்னோடு பிஸினஸில் இணைந்து கொண்ட மகன் ரவி அப்பாசாமி எனக்கு பெருமளவு பாரம் ஏற்றாமல் அத்தனை வியாபார விஷயங்களையும் கவனித்துக் கொள்கிறார்.

எனக்கு இன்று வயதாகிவிட்டது. இருப்பினும் இன்றைக்கும் பதினெட்டு மணி நேரம் உழைக்கிறேன். மற்றவர்களுக்கு இடைஞ்சல் செய்யாமல் நேர் வழியில் சென்றால் எந்தத் தொழிலிலும் கட்டாயம் ஜெயிக்கலாம். உண்மையாக உழைப்பவர்களை ஆண்டவன் கைவிடவே மாட்டான். எத்தனை இடர்பாடுகள் வந்தாலும் அவன் காத்து நிற்பான்.

- ச.ந.கண்ணன்

படங்கள் : ஸ்ரீஹரி

# ம.தி.மு.கவும்

● அ.கலைஹல் ரஹ்மான், திருச்சி-21

*? தமிழக காங்கிரஸில் 54 மாவட்ட தலைவர்களும் மாற்றப்பட்டு புதியவர்கள் பட்டியல் தயாராகிறதாமே?*

! தேர்தல் நடத்தாமல் 'தேர்வு' நடத்தினால் தலைவர்கள்தான் புதுசா இருப்பாங்க. அதிருப்தி அரதப் பழசா தொடரும்.

● என்.பாலகிருஷ்ணன், மதுரை-1

*? நடிகர் விஜயகாந்த் ஒற்றைக்காலில் நின்றாலும் அரசியலில் உச்சத்துக்கு வர முடியாது என்கிறாரே திருமாவளவன்?*

! எம்.ஜி.ஆரைப் பற்றிக் கூட இப்படிப் பேசியவர்கள் உண்டு. தேசிய முற்போக்கு திராவிட கழக அரசியலில் விஜயகாந்த் ஏற்கெனவே உச்சத்தில் இருக்கிறாரே!

● கே.கே.ராமச்சந்திரன்,
சென்னை - 11

*? வல்லரசு என்று ஏற்கப்படும் அமெரிக்காவிலேயே இயற்கைச் சீற்றத்தால் பாதிக்கப்பட்ட மக்களைச் சமூக விரோதிகளிடமிருந்து காக்க முடியாமல் போய்விட்டதே - அரசு தவறிவிட்டதே?*

! சமூக விரோதிகளிடமிருந்து மட்டுமல்ல; உதவி புரியச் சென்ற ராணுவத்தின் அத்துமீறல்களிலிருந்தே மக்களைக் காப்பாற்ற முடியவில்லை! பணக்கார நாடு என்று உலகம் கருதி வந்த அமெரிக்காவில் வறுமையில் வாடும் லட்சக்கணக்கான மக்கள் உள்ளனர் என்பதும் வசதி உள்ளோரும் மனிதாபிமானத்தில் ஏழைகளே என்பதும் கத்ரீனா சூறாவளியால் தெரிய வந்துள்ளது.

● சியாமளா ஈஸ்வரன், தேலூர்
மேட்டுக்கடை

*? சானியா மிர்ஸா, கிரிக்கெட்டின் மீதான ஆர்வத்தைத் தமது பக்கம் திரும்ப வைத்து விட்டாரே...?*

! ஆமாம்; அவருடைய டென்னிஸ்ஸைப் பலர் கவனித்து ரசித்தார்கள். சிலர் அவர் உடையைக் கவனித்து சர்ச்சை கிளப்புகிறார்கள். பிரபலமானாலே தேவையற்ற பிரச்னைகளும் தோன்றி விடுகின்றன.

● வசிகரன், சென்னை-18

*? பெட்ரோல், டீசல் விற்பனை வரியைத் தமிழக அரசு குறைக்க வேண்டும் என வாசன் கேட்பது சரியா?*

! கணவனைக் கேட்கத் தெம்பில்லாத மனைவி, குழந்தையைப் போட்டு அடிக்கிற கதைதான். பெட்ரோல்-டீசல் விலையில் மாநில அரசின் விற்பனை வரி மட்டுமல்ல; மத்திய அரசின் இறக்குமதி வரியும் கணிசமாக உள்ளடக்கம்! கருணாநிதியும் வாசனும் அதைக் கண்டுக்க மாட்டாங்க! இந்திய அரசின் பெட்ரோலியப் பொருள்கள் விலை நிர்ணயக் கொள்கை ஒரு திக்கு தெரியாத காடு!

● பி.பாலாஜி கணேஷ்,
கோவிலம்பூண்டி

*? சென்னையில் கல்லூரி விரிவுரையாளரான இளம் பெண் ஒருவர், செல்போனில் பேசியபடி தண்டவாளத்தைக் கடந்தபோது விபத்தில் சிக்கி இறந்து விட்டாராமே சார்... நீங்களாவது அட்வைஸ் செய்யக் கூடாதா...?*

! அட்வைஸ் என்ன... சராசரி

• பாராட்டும் பிரதமர்! • 'தடை'அமைச்சர்! • நிரம்பாத வெற்றிடம்! • ப்ரூஸ் லீ பல்டி! • நடந்











# தேர்தல் நிதி வசூலிக்கிறாரே..?



• சர்ச்சை மிர்ஸா!

பகுத்தறிவே போதும் இத்தகைய விபத்துகளைத் தவிர்க்க... பாழாய்ப் போகிற செல்போன் மோகம் அதை விழுங்கிடுது!

● க.நா.இராஜேஸ்வரன், மொரட்டுப்பாளையம்

**? தீராத நோய்களைக் குணப்படுத்துவேன் என்று பத்திரிகை - டீ.விகளில் டாக்டர்கள் விளம்பரம் செய்வதற்குத் தடை விதிக்கப்படும் என அன்புமணி கூறியிருப்பது குறித்து...?**

! ரொம்ப நல்ல காரியம்தான். ஆனால் எந்த தீராத நோயை எது குணப்படுத்தும், எது குணப்படுத்தாது என்று நிர்ணயித்து லைசென்ஸ் வழங்கும் வேலையை அவர் அமைச்சகம் மேற்கொள்ள வேண்டும். அப்போது லஞ்ச-ஊழல் நோயைக் குணப்படுத்த மருந்தே கிடையாது என்று தெரிய வரும்!

● எஸ்.சுவாமிநாதன், மன்னார்குடி

**? மூப்பனார் இருந்த வரைக்கும், 'கருணாநிதி-ஜெயலலிதாவுக்கு மாற்று மூப்பனார்' என்ற கருத்து இருந்தது. இப்போது அப்படி யாரைக் கூறலாம்?**

! முக்தா சீனிவாசனின் புத்தக வெளியீட்டு மேடையில் தோன்றிய அத்தனை தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர்களையும் தனித்தனியே அழைத்துக் கேட்டுப் பாருங்கள்... ஒரே பதிலைத்தான் சொல்வார்கள்: "என்னைத்தான்!"

● பி.ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி

**? "அ.தி.மு.கவில் புதியவர்களுக்கு வாய்ப்பு அளிக்கப்படும்''- ஜெயலலிதா...**

**"புது முகங்களுக்கு வாய்ப்பு அளிக்க அரசியல் என்ன சினிமாவா..?'' -கருணாநிதி...**

**தராசு...?**

! சினிமாவில் அரசியலையும் அரசியலில் சினிமாவையும் புகுத்திய அண்ணாவின் சீடர் இப்படிக் கேட்கலாமா! இளைஞர்களுக்கு வாய்ப்பு தரப்பட்டு, மூத்த, அனுபவமிக்க தலைவர்களால் பயிற்றுவிக்கப்படுவது எல்லா துறைகளிலும் போல் அரசியலிலும்



• சம உரிமைச் சந்தேகம்!

அவசியமானதே! எத்தகைய பயிற்சி என்பது அதைவிட முக்கியம்!

● ஏ.ஜஹ்பர் காதர், விளாத்திகுளம்

? "சர்வாதிகாரிபோல் நடந்து கொள்ளும் அத்வானியால், குடும்பம் போல் இருந்த பா.ஜ.க தனியார் கம்பெனிபோல் ஆகிவிட்டதே" என்று குற்றம் சாட்டுகிறாரே குரானா - இது பற்றி?

! அப்படியெல்லாம் பேசியதற்கு மன்னிப்பு கேட்டு, மறுபடியும் கட்சிக்குள் அனுமதிக்கப்பட்டு, இப்போ "மன்னிப்பு கோரவில்லை, வருத்தம்தான் தெரிவித்தேன்"என்கிறாரே! பல்டி, அந்தர்பல்டிக்கு மேல் புருஸ்லீயின் நாக் அவுட் பல்டியாக அல்லவா இருக்கிறது!

● சே.தமிழரசி, தென்கடப்பந்தாங்கல்

? மன நிம்மதி எங்கு கிடைக்கும் - கிராமங்களிலா? நகரங்களிலா...?

! மனத்தில்!

● டி.செல்வன், நெல்லையப்பபுரம்

? சினிமாவில் புகை பிடிக்கும் காட்சிக்குத் தடை விதித்தது மாபெரும் தவறு என்று இயக்குனர் அடூர் கோபால கிருஷ்ணன் கூறியிருப்பது பற்றி...?

! கலைஞனின் கற்பனையில் தலையிடுவதாகக் கருதிச் சொல்கிறார் கோபால கிருஷ்ணன். ஒரு வகையில் இது நியாயம்தான். ஆனால், கலையாக அன்றி, புகைத் தலை ஹீரோ சாகசமாகச் சித்திரித்து, பாமர மக்களை ஏமாற்றும்போது அவர்களுடைய உடல் நலன் கருதி இத்தகைய தடைகள் அவசியமாகின்றன.

● என்.சண்முகம், திருவண்ணாமலை

? ம.தி.மு.கவும் தேர்தலில் நிதி வசூலிக்க ஆரம்பித்துவிட்டதே?

! வசூலித்ததைக் காட்சிப் படுத்தும் ஆரோக்கியமான புதிய கலாசாரத்தையும் ஆரம்பித்து வைத்துவிட்டதே!

● ஆர்.பேபி ரேகா, குடியாத்தம் -2 ●

? அரசியல் கட்சிகளின் அநாகரிகமான ஆபாசமான மேடைப் பேச்சுக் கலாசாரத்தைத் தடுக்க முடியாதா?

! தடை அமைச்சர் அன்புமணிக்கு வேண்டுமானால் மனு அனுப்பிப் பாருங்களேன்!

● வி.என்.கோபால், சென்னை-91

? மனைவிக்குச் சம உரிமை (வீட்டில்) கொடுப்பது வேறு; ஆட்சியில் (வந்தால்) அவரை extra constitutional power centre ஆக உருவாக்க முற்படுவது வேறு என்பது விஜயகாந்துக்கு ஏன் புரியவேயில்லை...?

! அவருடைய அரசியல் பிரவேச மாநாட்டில் மனைவி முதல் வரிசையில் உட்கார்ந்திருக்கும்போது, இதெல்லாம் எப்படிங்க புரியும்! போகப் போகப் புரிஞ்சுக்குவாரு.

❑ ரூ.100/- பரிசு பெறுபவர்:

கே.கே.ராமச்சந்திரன்,
43, ராமகிருஷ்ணன் தெரு,
சென்னை - 600 011

● ரூ.50/- பரிசு பெறுபவர்:

ஆர்.பேபிரேகா,
22, காளியம்மன் கோயில்தெரு,
பிச்சனூர்பேட்டை,
குடியாத்தம் - 632 602

# நீங்க சொல்லியாச்சா?




❖ 'வாழ்க நலமுடன்' (கல்கி மருத்துவ மலர் 2005 ) சிறப்பாக இருந்தது. எல்லா வகையான மருத்துவ சிகிச்சைகள் பற்றியும் தெளிவாகவும், சுருக்கமாகவும் இருந்தது. செய்தித்தாள்களிலும், வாரப் பத்திரிகைகளிலும் மருத்துவக் குறிப்புகள் வருகின்றன. அவற்றைப் பாதுகாத்து வைக்க முடியவில்லை. ஆனால், தாங்கள் வெளியிட்ட மருத்துவ மலர், மருத்துவக் கலைக்களஞ்சியமாக உள்ளது. எக்காலத்திலும் படித்துப் பாதுகாக்கப்பட வேண்டிய அற்புதப் பொக்கிஷம். வெளியிட்ட 'கல்கி' இதழுக்குப் பாராட்டு.

**சென்னை, கே.எஸ். கோவர்த்தனன்.**

❖ மருத்துவ மலர் படித்தேன். நிறைய மருத்துவத் தகவல்கள் இருக்கின்றன. முதலில் பக்கங்களைப் புரட்டி மேலோட்டமாகப் பார்த்து விடுவது, மறுபடி ஆழ்ந்து படிப்பது என சமயம் கிடைக்கும்பொழுதெல்லாம் படிக்கிறேன். அழகான அற்புதமான மலர்!

திருப்பத்தூர், எம். ஜெகதீசன்.

## படிச்சவங்க பாராட்டு!





# அன்பே ஆருயிரே

'சண்டை போட்டு படத்தின் இடைவேளையில் பிரிந்து போகும் காதலர்கள் சிவா-மதுவை (எஸ்.ஜே.சூர்யா-நிலா)அவர்களின் உயிருள்ள நினைவு உருவங்களே (இன்னொரு எஸ்.ஜே.சூர்யா-நிலா) இடை வேளைக்குப்பின் எப்படிச் சேர்த்து வைக்கின்றன என 'குஷி'யாய் வழக்கம்போல் கதையைச் சொல்லிவிட்டு, படத்தை 'ஆறரை கோடி பேர்களில் ஒருவன்' பாடலோடு டாப் கியரில் ஆரம்பிக்கிறார் இயக்குனர்.

இடைவேளைக்கு முன் வரும் சிவா-மது ஊடல் காட்சிகள் சுறுசுறு!

காதலன்-காதலி ஒரே வீட்டில் தங்கியிருக்கிறார்களாம், ஒரே கட்டிலில்தான் படுத்துத் தூங்குவார்களாம், ...ளாம், ....ளாம் - அட அட என்ன ஒரு கலாசாரச் சிறப்பு! புல்லரிக்கிறது. எஸ்.ஜே.சூர்யா படங்களை விட்டுப் பிரிக்கவே முடியாத இரட்டை அர்த்த வசனங்களும், முகம் சுளிக்க வைக்கும் காட்சிகளும் பி.எஃப்-ல் இல்லாமல் இருக்குமா? இப்போது அனுமதித்துள்ள சென்சார் போர்டு, 'நியூ' போல மெல்ல விழித்து பின்னால் தடை செய்யுமாயின் யாருக்கு லாபம்?

நிலா நடிப்பிலும், கவர்ச்சியிலும் குறை வைக்கவில்லை. அதற்காக 'இன்னொரு சிம்ரனாக' ஒப்புக் கொள்வதெல்லாம்... ஸாரி!

படத்தின் மிகப் பெரிய பலம் ஏ.ஆர். ரஹ்மானின் பாடல்கள். ஒரே மெட்டில் வரும் 'மரங்கொத்தியே...', 'மயிலிறகே...' இரண்டும் படமாக்கப்பட்ட விதங்கள் அருமை. 'வருகிறாய்...' பாடல் கிளாஸ்! வாலி, சூர்யாவுக்கு கைகொடுத்திருக்கிறார். ஆனால் படத்தில் திடீர் திடீரென்று பாடல்கள் தேவையில்லாமல் குதிக்கின்றன.

அழகான ஸ்டோரி லைன். 'அ்'ட... 'ஆ்'கா... என எல்லோரும் பாராட்டும்படி நூறு அடித்திருக்கலாம். 'அ்'ய்யோ...'ஆ்'... என ரசிகர்களை சுவாரசியமில்லாத திரைக்கதையால் தியேட்டரில் நெளிய வைத்து நூறு பந்துகளில் முப்பத்தைந்துதான் அடித்திருக்கிறார் எஸ்.ஜே.சூர்யா!

- அம்பி நாராயணன்

